ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தான வெளியீடு 6.

# திருவிடைமருதூர்க் கல்வெட்டுக்கள்

## (குறிப்புக்களுடன்)



திருக்கோயில் தோற்றமும் — காருண்யாமிர்த தீர்த்தமும்

திருவிடைமருதூர்

ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவிடைமருதூர்க் கல்வெட்டுக்கள்

(குறிப்புக்களுடன்)

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

திருவிடைமருதூர்

ஸ்ரீ மகாலிங்கசுவாமி தேவஸ்தானத்தில்

வெளியிடப்பெற்றது.

1960



ஸ்ரீ மகாலிங்கப்பெருமான்

சிவமயம்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

**பிறையார் சடையண்ணல், மறையார் மருதரை**
**நிறையால் நினைபவர், குறையார் இன்பமே.**

— சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

'தென்னாடுடையசிவனே போற்றி' என்பது மணிவாசகர் மணிமொழி. சிவம் பெருக்கும் நாடு தென்னாடு. இது மிகமிகச் சிறப்பு வாய்ந்தது. எங்குபார்த்தாலுமே உயர்ந்த கோபுரங்களோடு கூடிய தேவாலயங்கள் காட்சி அளிக்கின்றன. சிறு கிராமங்களில்கூட ஒன்றிரண்டு விநாயகர் ஆலயங்கள் இல்லாமலில்லை. மக்களிடத்தில் சமய உணர்வு அப்படி வேரூன்றியிருக்கிறது. திருக்கோயிலில்லாத ஊர் ஊராகாது; காடுதான் என்றருளுகின்றார் திருநாவுக்கரசுசுவாமிகளும். இதனாலேதான் ஆத்மீகத்துறையில் சிறந்து விளங்கும் நாடு இந்தியநாடு என்று பிற நாடுகள் நம்மைப் புகழ்ந்து பாராட்டுகின்றன.

இத்தகைய பெருமதிப்புக்குக் காரணமான தஞ்சை இராஜராஜேஸ்வரம், கங்கைகொண்ட சோழபுரம்போன்ற பெரிய பெரிய ஆலயங்களை யெல்லாம் கட்டி நமக்கு உதவியவர்கள் அன்று நமது தமிழ்நாட்டை ஆண்ட முடியுடைமன்னர் களேயாவர். அவர்கள் அப்படிக் கோயில்களைக் கட்டியதோடுமட்டும் அமைந்தார்கள் இல்லை; பூசனை விழா முதலியன வழிவழி நடைபெற, நிலங்களையும் தானஞ்செய்து, தானசாசனங் களை அனைவரும் அறிந்து அவைகள் ஒழுங்காக நடைபெற்றுவருகின்றனவா என்று பார்த்துக் கொள்வதற்காகத் திருக்கோயிற்சுவர்கள், கருப் பக்கிருகங்கள், தூண்கள் இப்படிப் பார்வை யான பல இடங்களிலும் எழுதிவைத்துள்ளனர். அவைகளே கல்வெட்டுக்கள் என வழங்கப் பெறுகின்றன.

இப்படி அமைக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் நம் திருக்கோயில்களில் ஏராளமாக உள்ளன. அரசாங்கம், அவைகளைப் படியெடுத்து, நூல் வடிவில் பற்பல தொகுதிகளாக வெளியிட்டிருக் கிறது. அத்தொகுதிகளில் திருவிடைமருதூர்த் தலத்தைப்பற்றியனவாக உள்ள ஒரு முப்பது கல்வெட்டுக்களே குறிப்புக்களுடன் இந்நாலில் தரப்பட்டுள்ளன.

இந்தக் கல்வெட்டுக்கள் அமாவாசை திரு வமுதுக்கும், திருவிளக்குக்கும், திருமஞ்சனம்

எடுப்பதற்கும், சர்க்கரைப்பொங்கல் நிவேதனத்திற்கும், தூபத்திற்கும், விழாநாட்களில் தபசிகள் பிராமணர்கள் உணவு அருந்துவதற்கும், திருப்பாடல்கள் பாடுவதற்கும், உடுக்கை வாசிப்பதற்கும், மார்கழித் திருவாதிரை இரவு நெய் அபிஷேகத்திற்கும், தைப்பூசவிழா வைகாசித் திருவாதிரை விழாக்காலங்களில் தீர்த்தவாரியின் முன்னும் பின்னும் நாடகங்கள் நடத்துதற்கும், மற்றும் இதுபோன்ற பல நற்செய்கைகளுக்கும், இராஜராஜன் குலோத்துங்கன் விக்கிரமன் கோப்பெருஞ்சிங்கன் உள்ளிட்ட மன்னர்கள் காலத்து, நிலசாசனம் செய்யப்பெற்ற செய்தியினை எடுத்துரைக்கின்றன. சில நிலங்களுக்கு நான்கெல்லைகளும் நன்கு விளக்கமாகத் தரப்பட்டுள்ளன. சாசனகாலத்திய மன்னர்களின் புகழை அழகுபடக்கூறும் மெய்க்கீர்த்திகள் ஐந்து கல்வெட்டுக்களில்மட்டும் காணப்படுகின்றன; ஏனையவற்றில் காணப்பெறவில்லை.

சமயம், விஞ்ஞானம், வரலாறு இப்படிப் பலதுறைநூல்களை அழகாக வெளியிட்டுச் செந்தமிழுலகுக்கு இலவசமாக உபகரித்துவருகிற கருணைவள்ளலாகிய திருவாவடுதுறை ஆதீனம் குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இத்துறையிலும் நூல்கள்வெளியிடத் திருவுளங்கொண்டருளியதைச் செந்தமிழுலகம் பாராட்டி நன்றிசெலுத்த மிகவும் கடமைப்பட்டுள்ளது.

அவர்கள் கட்டளையிட்டருளியபடி, ஆதீனத்திற்குச் சொந்தமான திருவிடைமருதூர் ஸ்ரீமகாலிங்கசுவாமி தேவஸ்தானத்தில் நடைபெறும் இரண்டாவது ஆண்டு பன்னிருதிருமுறைப் பாராயண நிறைவுவிழா நன்னாளன்று இந்நூல் வெளிவருகிறது.

கடையவனேனையும் கருணையினால் இந்த நற்பணியிலே ஈடுபடுத்தி ஆட்கொண்டருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களுடைய பொன்னார் திருவடிக்கமலங்களுக்கு அடியேன் வணக்கம் என்றென்றும் உரியதாகுக.

இங்ஙனம்,

திருவிடைமருதூர்,
விகாரி - தை.

பொன். சுப்பிரமணிய பிள்ளை,
தலைமைத்தமிழாசிரியர்,
திருவாவடுதுறைஆதீன உயர்நிலைப்பள்ளி.



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

# இதில் அடங்கியன

[எண் - கல்வெட்டு எண்]

# மெய்க்கீர்த்தி இலக்கணம்

" தொழி லார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீ ரடியால்
எழிலரசர் செய்தி இசைப்பர் "

— வெண்பாப்பாட்டியல்.

" சொற்சீ ரடியால் தொழிற்படு புகழை
வேந்தன்பாற் கூறின் மெய்க்கீர்த்தி யாகும் "

— இலக்கணவிளக்கப்பாட்டியல்.

" சீர்நான் காகி இரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புக ழெல்லாஞ் சொல்லியும்
அந்தத் தவன்வர லாறு சொல்லியும்
அவளுடன் வாழ்கெனச் சொல்லியும் மற்றவன்
இயற்பெயர் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி "

— பன்னிருபாட்டியல்.

உ
சிவமயம்

# திருவிடைமருதூர்க் கல்வெட்டுக்கள்

(குறிப்புக்களுடன்)

---

## 1. விக்கிரமசோழன் சாசனம்

(No. 694 A. R. No. 130 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ
பூமாது புணரப் புவிமாது மலர
நாமாது விளங்க சயமாது விரும்பத்
தன்னிரு பதமலர் மன்னவர் சூட
மன்னிய உரிமையில் மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப
வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்பக்
கலிங்க மிரியக் கடமலை நடாத்தி
வலங்கொ ளாழி வளருழி நடப்ப
இருசுட ரளவும் ஒருகுடை நிழற்கீழ்
முக்கோக் கிழா னடிக ளொடும்
வீரசிம்மா சனத்து வீற்றிருந் தருளிய
கோப்பரகேஸரி பன்மரான உடையார்
ஸ்ரீவிக்கிரமசோழதேவர்க்கு,

யாண்டு ௫ - ஆவது உய்யக்கொண்டார் வள நாட்டுத் திரைமூர்நாட்டுத் திருவிடைமருதூருடையார்

கோயிலில் வீரசோழ அனுக்...ந. ஆட்கொண்டானுந அரிகுலராஜ மாராயர் சந்திராதித்தவல் உடையார் திருவிடைமருதூருடையார் திருக்கற்றளியில் மாணிக்கக் கூத்தற்கு அமாவாஸிதோறும் திருவமுது உள்ளிட்டு வேண்டுவனவற்றுக்கும் சட்டிச்சோற்றுக்கும் அமாவாசை ஒன்றுக்கு நெல்லு ஐங்குறுணி இருநாழிக்கு ஓராட்டைக்கு நெல்லு ஐங்கலனே முக்குறுணியும் தேவர்கடமைக்கு அசல்நிலம் வரிசைப்படி முன்பு மாத்தால் நெல்லு ... கலத்தில் செம்பாதியால் நெல்லு ஐங்கலனே முக்குறுணியுமாக நெல்லுப் பதின்கலனே தூணிப்பதக்கு யாண்டு ஐஞ்சாவது வரை பயிர்ச்செலவின்றி எய்கொல்லையாய்க் கிடந்த திருவிடைமருது உள்ளூரில் சதாசிவன் மயக்கலில் நடுவில் வழிக்கு மேற்கு ஈரங்கொள்ளி கால் செய்யில் வடதலையில் கொல்லை நிலம் ஒருமா முக்காணியும் ஐஞ்சாவதுவரை பயிர்ச்செலவின்றிக் கிடந்தமையில் இவன் தன் ஸ்வம் இட்டுத் திருத்தி நிவந்தத்துக்கு நெல்லு ஐங்கலனே முக்குறுணியும் தேவர்கடமைக்கு நெல்லு ஐங்கலனே முக்குறுணியும் ஆக நெல்லுப் பதின்கலனே தூணிப்பதக்கும் ஆட்டாண்டுதொறும் இறுப்பதாக விட்ட நிலம் குழி நூற்றெழுபத்தஞ்சி னுல் நிலம் ஒருமா முக்காணியும் விட்டது. மேற்படியான் சந்திராதித்தவல் உடையார் திருவிடைமருதுடையார்க்குப் பலிசை செகுத்து ஒரு திருமஞ்சனக் குடம் வைக்க ஸ்ரீ பண்டாரத்து ஒடுக்கின காசு ஒன்று. இது பந்மாகேஸ்வரரக்ஷை.

*கல்வெட்டு இருக்குமிடம் :- திருவிடைமருதூர் ஸ்ரீ மஹாலிங்கசுவாமிகோயில் இரண்டாவது பிரகாரத்தின் கிழக்குச்சுவர்.*

*அரசன் :-* விக்கிரமசோழதேவன் 1. (கி. பி. 1118 - 1136).

இவன் முதற்குலோத்துங்கனின் மகன். குலோத்துங்கனுக்குப்பின் பேரரசனாகக்கங்கைகொண்டசோழபுரத்தில் முடிசூடிக்கொண்டான். சோழமன்னர்கள் மாறி மாறி வைத்துக்கொண்ட இராசகேசரி, பரகேசரி என்ற பட்டங்களுள் இவன் பரகேசரி என்னும் பட்டம் பெற்றவன். இக்கல்வெட்டுள் குறிக்கப்படும் போர் 'கலிங்கப்போர்' ஆகும் என்பதைக் 'கலிங்கமிரியக் கடமலை நடாத்தி' என்னும் மெய்க்கீர்த்திப் பகுதியால் அறியலாம். மூவருலாவில் சிறப்பித்துப் பாடப்பட்ட அரசன் இவனே.

*செய்தி :-* உய்யக்கொண்டார்வளநாட்டுத் திரைமூர்நாட்டுத் திருவிடைமருதூருடையார் கோயிலில் வீரசோழஅணுக்கன் ஆட்கொண்டானான அரிகுலராஜமாராயன் திருவிடைமருதூர் மாணிக்கக்கூத்தற்கு அமாவாசைதோறும் திருவமுது உள்ளிட்ட சட்டிச் சோற்றுக்கு அமாவாசை ஒன்றுக்கு ஐங்குறுணி இருநாழியாக ஓராண்டுக்கு நெல்லு ஐங்கலம் முக்குறுணியும், தேவர்கடமைக்கு நெல்லு ஐந்து கலம் முக்குறுணியும் ஆக பதின்கலம் தூணிப்பதக்கு நெல்லுக்காக நீண்டகாலம் பயிர்ச்செலவின்றிக்கிடந்த உள்ளூரில் சதாசிவன் மயக்கலில் ஒருமா முக்காணியும், திருத்துமாறு இட்டநிலம் ஒருமா முக்காணி; இந்நிலங்கொண்டு இந்நெல் அளக்குமாறு தானஞ்செய்துள்ளான் என்று தெரிகிறது.

*பொருள் விளக்கம் :-* ஸ்வஸ்திஸ்ரீ - மங்களம் உண்டாகுக. பூமாது - இலட்சுமி. புவிமாது - பூமிதேவி. நாமாது - சரசுவதி. சயமாது - வீரலட்சுமி.

*பதமலர் - திருவடியாகிய தாமரைமலர். வெங்கலி - கொடிய வறுமை. கடமலே - யானே. ஆழி - ஆக்ஞா சக்கரம். இரு சுடர் - சந்திர சூரியர்கள். சட்டிச் சோறு — கோயில் வேலேக்காரர்களுக்குக் கொடுக்கப் படும் உரிமைப் பிரசாதம். திருக்கற்றளி - கோயில். குறுணி - எட்டுபடி. பலிசை - வட்டி. எய்கொல்லே - தரிசுநிலம். ஸ்வம் — பொன். ஸ்ரீபண்டாரம் — கோயில் பொக்கிஷம். காசு - பொற்காசு. மாத்தால் — ஒரு மா நிலத்துக்கு. சந்திராதித்தவல் - சந்திர சூரியர் உள்ளவரை. பன்மாகேஸ்வர ரக்ஷை - பல சிவனடி யார்கள் பாதுகாப்பாராக.*

*பொதுக்குறிப்பு :- இக்கல்வெட்டிலிருந்து பழங் கால அரசர்கள், பயிர்ச்செலவின்றிக்கிடக்கும் நிலங் களேப் பொன்கொண்டு திருத்தி, திருக்கோயிலுக்கு அளித்துள்ளார்கள் என்பது அறியக்கிடக்கிறது.*

## 2. விக்கிரமசோழன் சாசனம்

(No. 695 A. R. No. 131 of 1895)

ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனசக்ரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சோழதேவருக்கு யாண்டு எ-ஆவது ரிஷபஞாயற்று நாலாநாளான கொட்டுநாள் ௩௧௧-ஞல் சுத்த மலி வள நாட்டுத் தனியூர் ஸ்ரீ ராஜாதிராஜ சதுர்ப்பேதி மங்லத்து எட்டாஞ்சேரி பிராந்தூர் கருணைகரகட்டன் கொங்குணி ஆண்ட நங்கைச்சாநியும் இவள் மகள் சத்தியபாவையும் உடையார் திருவிடைமருதுடை யார்க்குச் சந்திவிளக்கு இரண்டு எரிக்க பண்டாரத்து ஒடுக்கின காசு உ. இக்காசு இரண்டின் பலிசை

கொண்டு சந்திவிளக்கு இரண்டும் சந்திராதித்தவல் எரிக்க, இது பந்மாகேஸ்வரரக்ஷை. இவை கோயில் கணக்கு மருதுடையான் எழுத்து.

*இடம் :-* முன் இட்டமே.

*அரசன் :-* விக்கிரமசோழதேவன்.

*செய்தி :-* சுத்தமலி வளநாட்டுத் தநியூர் ஸ்ரீ ராஜ ராஜ சதுர்ப்பேதிமங்கலத்து எட்டாஞ்சேரிபிராந்தூர் கருணாகரகட்டன் ஆண்ட நங்கைச்சாநியும் இவள் மகள் சத்தியபாவையும் திருவிடைமருதூருடையா ருக்குச் சந்திவிளக்கு இரண்டு எரிக்க ஸ்ரீபண்டாரத்து ஒடுக்கின காசு இரண்டு. இதன் வட்டிகொண்டு சந்திரசூரியர் உள்ளவரை விளக்கு எரிக்கவேண்டும். இவை எழுதியவன் கோயில் கணக்கு மருதுடையான்.

*பொருள் விளக்கம் :-* தநியூர் தமக்கென்றே ஒரு சபை உடையது. தமது ஊர்க் காரியங்களைத் தாமே கவனிக்கும். இது அதிகாரிகளுக்கு உட்பட்டதல்ல. அரசனே நேரில் கவனித்து ஆவன செய்வான்.

சந்திராதித்தவல் - சந்திர சூரியர் உள்ளவரை. ரிஷபஞாயறு - வைகாசிமாதம். சதுர்ப்பேதிமங்கலம்- நான்மறை அந்தணர்கள் இருக்குமிடம்; இது சதுர் வேதிமங்கலம் எனவும் கல்வெட்டுக்களில் வழங்கும். பலிசை - வட்டி.

*பொதுக்குறிப்பு :-* பண்டு ஆடவர்களேயன்றி அவரவர்கள் வீட்டுப் பெண்மகளிரும் தருமசிந்தனை உடையவர்களாக இருந்தார்கள் என்பதை இந்தக் கல்வெட்டால் அறியலாம்.

## 3. குலோத்துங்கசோழன் சாசனம்

(No. 696 A. R. No. 132 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ
புகழ்சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்
பொன்னேமி யளவும் தன்னேமி நடப்ப
விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்துச்
சக்கரக் கோட்டத்து விக்கிரமத் தொழிலால்
புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி யயில்முனைக்
கொந்தள வரசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசை
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவை
தனிமையுந் தவிர்த்துப் புனிதத் திருமணி
மகுடம் உரிமையிற் சூடி
தன்னடி யிரண்டுந் தடமுடி யாகத்
தொன்னில வேந்தர் சூட முன்னை
மனுவாறு பெருகக் கலியாறு வறப்பச்
செங்கோல் திசைதொறுஞ் செல்ல வெண்குடை
இருநில வளாக மெங்கணுந் தனது
திருநிழல் வெண்ணிலாத் திகழ வொருதனி
மேருவில் புலிவிளை யாட வார்கடற்

றீவாந்தரத்துப் பூபாலர் திறைவிடு தந்த
கலஞ்சொரி களிறுமுறை நிற்ப விளங்கிய
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை யென்னுஞ்
சொல்லெதிர் கோடிற் றல்லது தன்கை
வில்லெதிர் கோடா விக்கலன் கல்லதர்
நங்கிலி துடங்கி மணலூர் நடுவோர
துங்கபத் திரைபுகத் துரத்தி வெங்கணும்
பட்டவெங் களிறும் விட்டதன் மானமும்
கூறிய வீரமும் கிடப்ப வேறின
மலைகளும் முதுகு நெளிப்ப விழிந்த
நதிகளுஞ் சுழன் றுடைந் தோட விழுந்த
கடல்களும் தலைவிரித் தலமரக் குடதிசைத்
தன்னு ளுகந்து தானுந் தானையும்
பன்னு ளிட்ட பலபல முதுகும்
பயந்தெதிர் மாறிய ஜயப்பெருந் திருவும்
பழியிகந்து குடுத்த புகழின் செல்வியும்
வாளா ரொண்கண் மடந்தைய ரீட்டமும்
மீளாது குடுத்த வெங்கரி நிரையும்
கங்கமண் டலமுஞ் சிங்கண மென்னும்
பாணி யிரண்டு மொருவிசை கைக்கொண்டு
ஈண்டிய புகழொடும் பாண்டிமண் டலமும்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ள
வருபரித் தரங்கமும் பொருகரிக் கலன்களும்
தந்திர வாரியு முடைத்தாய் வந்து
வடகடல் தென்கடல் பாய்வது போலத்
தன்பெருஞ் சேனையை யேவிப் பஞ்சவர்

ஐவரும் பொருத போர்க்களத் தஞ்சி
வெரிந்நெளித் தோடி யரணெனப் புக்க
காடறத் துடைத்து நாட்டடிப் படுத்து
மற்றவர் தம்மை வனசரர் திரியும்
பொற்றை வெஞ்சுர மேற்றிக் கொற்ற
விஜய ஸ்தம்பம் திசைதொறும் நிறுத்தி
முத்தின் சலாபமும் முத்தமிழ்ப் பொதியிலும்
மத்தவெங் கரிபடு மையச் சையமும்
கன்னியுங் கைக்கொண் டருளித் தென்னுட்டு
எல்லை காட்டிக் குடமலை நாட்டுள
சாவே றெல்லாந் தனிவிசும் பேற
மாவே றியதன் வருதினித் தலைவரைக்
குறுகலர் குலையக் கோட்டா றுட்பட
நெறிதொறும் நிலைகளிட் டருளி மறியுநல்
கலிங்க மண்டலங் கைப்படுத் தருளி
திறல்கொ ளாரமுந் திருப்புயத் தலங்கலும்போல
வீரமுந் தியாகமும் விளங்கப் பார்தொழச்
சிவனிடத் துமையெனத் தீனசிந் தாமணி
புவனமுழு துடையா ளிருப்ப வவளுடன்
கங்கைவீற் றிருந்தென மங்கையர் திலதம்
ஏழிசை வல்லபி ஏழுலக முடையாள்
வாழி யமர்ந்தினி திருப்ப வூழியும்
திருமா லாகத்துப் பிரியா தென்ற
திருமகள் திகழெனத் தியாக வல்லித்
தம்முல குடையா ளிருப்ப மாவினில்
புவனமுழு துடையா ளொடும் வீற்றிருந்தருளிய

கோவிராஜகேஸரி பந்மரான சக்கிரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு,

யாண்டு உசு-ஆவது கல்வெட்டுப்படி யாண்டு உசு-ஆவது நாள் கஎஉ-ஞல் உலகுய்யக்கொண்ட சோழவளநாட்டுத் திரைமூர்நாட்டு உடையார் திரு விடைமருதுடையார்க்குத் திருநொந்தாவிளக்கு பட்டி யூருடையான் நம்பன் மதுராந்தகதேவருள் குலோத் துங்கசோழவிறை நாட்டு மூவேந்தவேளான் வைத்த திருநொந்தாவிளக்குக் கல்வெட்டுவிக்க என்று திரு விடைமருதுடையார் ஸ்ரீபாதமூலப்பட்டுடை பஞ்சா சாரியத் தேவகன்மிகள் திரைமூர் ஸபையார்க்கும் திருவிடைமருதில் நகரத்தார்க்கும் திரைமூர் ஊர்க்கும் ஸ்ரீகாரியம் வடசாத்தமங்கலமுடையான் கூத்தன் சோமதேவனை கன்னகிதரபாணி மூவேந்த வேளானுக் கும் ஸ்ரீமாஹேச்வரக் கண்காணி பாரதாயன் எடுத்த பாதம் இன்புற்றிருந்தானை பொற்கோயில் நம்பிக்கும் கரணத்தானுக்கும் ஸ்ரீமுகம் பிரஸாதஞ்செய்தருளிவரத் தலைமேல்கொண்டு] பிரஸாதப்பட்டுப் பட்டியூருடை யான் நம்பன் மதுராந்தகதேவனை குலோத்துங்க சோழவிறைநாட்டு மூவேந்தவேளான் வைத்த திரு நொந்தாவிளக்கு இரண்டினுக்கு வைத்த ஆடு கஉ௰. இவ்வாடு நூற்றிருபதும் கொண்டு ஏகநாயகனால் நித்தம் உரிநெய்யட்டுவதாகக் கொண்ட மன்றாடி தாமோதரன் வெண்காடனும் தேவன் இடங்கொண் டானும் மருதன்தேவனும் பட்டன்பெற்றானும் இந்த ஆடு நூற்றிருபதுங்கொண்டு நித்தம் ஏகநாயகனால் உரிநெய் சந்திராதித்தவல் இந்நெய் தண்டி இத்திரு நொந்தாவிளக்கு இரண்டும் எரிப்பிக்கக் கடவோமா னோம். தேவர்கன்மிகளும் திரைமூர் ஸபையாரும்

திருவிடைமருதில் நகரத்தாரும் திரைமூர் ஊராரும் இவை ஸ்ரீ கோயில் கணக்கு கொற்றமங்கலமுடையான் அருமொழி பொற்காரி எழுத்து. இது பந்மாஹேஸ்வரரக்ஷை.

*இடம் :-* முன்னிடமே.

*அரசன் :-* முதற்குலோத்துங்க* சோழதேவன். இவன் கி. பி. 1070 முதல் 1118 வரை அரசாண்டவன். தீனசிந்தாமணி புவனமுழுதுடையாள், ஏழிசை வல்லபி ஏழுலகமுடையாள், தியாகவல்லி உலகுடையாள் என மூன்று மனைவியர் இதில் குறிக்கப்படுகின்றனர். இவன் ஆட்சி 26-ம் ஆண்டு 172-ம் நாள் இச்சாசனம் ஏற்படுத்தப்பட்டது.

*செய்தி :-* இது நூற்றிருபது ஆடுகளைக்கொண்டு இரண்டு நுந்தாவிளக்கு எரிக்க ஏற்பாடுசெய்யப்பட்டுள்ளதைக் கூறுகிறது.

*பொருள் விளக்கம் :-* புணரி அகழ் - கடலாகிய அகழி. பொன் நேமி - மகாமேருமலை. விக்கிரமம் - வெற்றி. மதவரை - மதங்கொண்ட மலை; அதாவது யானை. கமலப்பூமகள் - லட்சுமி. இருநில வளாகம் - பெரியபூமியாகிய இடம். பூபாலர் - அரசர். கலம் - கப்பல். பிற்குலப்பிறை - தேய்பிறைச் சந்திரன். அதர் - வழி. தந்நாளுகந்து - பிறந்தநாள்விழாகொண்டாடி. ஒண்கண் - ஒளிபொருந்திய கண். பாணி - தேயம். பரி - குதிரை. தந்திரவாரி - சேனைக்கடல். அறத்துடைத்து - முழுவதும் அழித்து. வனசரர் - வேட்டுவர். பொற்றை - கற்பாறை; துறுகல். கரி - யானை. சையம் - மலை. வருதினித்தலைவர் - சேனைத் தலைவர். குறுகலர் - பகைவர். நிலைகள் - நிலப்படைகள். பிரஸாதம் செய்தருளிவர - கொடுத்துவர.

## 4. குலோத்துங்கசோழன் சாசனம்

( No. 697 A. R. No. 133 of 1895 )

ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழதேவற்கு யாண்டு சகூ - ஆவது கங்கைகொண்ட சோழபுரத்து பழைய வளத்து கைக்கோளங் பெற்ற திருநள்ளாறங் உடையார் திருவிடைமருதுடையாற்கு உச்சிச்சந்தி திருமஞ்சனமாடியருளின ஒருகுடம் சந்திராதித்தவல் பலிசைக்குச் செலவாகச் செல்ல ஸ்ரீ பண்டாரத்து ஒடுக்கின காசு க - க்கு க. இது பங்மாகேஸ்வரரக்ஷை.

*இடம் :- முன் இடமே.*

*அரசன் :- குலோத்துங்கசோழதேவன்.*

*செய்தி :- உச்சிச்சந்தித் திருமஞ்சனம் ஆட ஒரு குடம் தண்ணீர் கொண்டுவருவாரது செலவுக்காக ஸ்ரீ பண்டாரத்து வைத்த காசு ஒன்று. இதன் வட்டி கொண்டு இச்செலவைச் செய்யவேண்டும்.*

## 5. குலோத்துங்கசோழன் சாசனம்

( No. 698 A. R. No. 134 of 1895 )

ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவனசக்ரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு யாண்டு சகூ-ஆவது கங்கைகொண்ட சோழபுரத்து விக்கிரமசோழங் வெளத்து கைக்கோளங் சீராளங் நாராயணங் உடையார் திரு

விடைமருதுடையார்க்குச் சந்திராதித்தவல் பலிசை யால் ஒரு திருநொந்தா விளக்கு செல்கைக்கு ஸ்ரீ பண்டாரத்து ஒடுக்கின காசு ஐ. பந்மாகேஸ்வரரக்ஷை.

*இடம் :-* முன் இடமே.

*அரசன் :-* குலோத்துங்கசோழதேவன்.

*செய்தி :-* திருநுந்தா விளக்கு எரிக்க ஒரு காசு ஸ்ரீ பண்டாரத்துக்கு அளித்துள்ளான். இதன் வட்டி கொண்டு விளக்கு எரிக்கவேண்டும்.

*பொருள் விளக்கம் :-* நொந்தாவிளக்கு-தூண்டா விளக்கு. அதாவது எப்பொழுதும் எறிந்துகொண்டிப்பது; நந்தாவிளக்கு, நுந்தாவிளக்கு என்றெல்லாம் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது.

## 6. கோப்பெருஞ்சிங்கன் சாசனம்

( No. 699 A. R. No 135 of 1895 )

ஸ்வஸ்திஸ்ரீ சகலபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ கோப் பெருஞ்சிங்க தேவற்கு யாண்டு கஅ-ஆவது கன்னி ஞாயற்றுச் சுக்கிலபட்சத்துப் பஞ்சமியும் ஞாயிற்றுக் கிழமையும் பெற்ற சதயத்துநாள் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திரைமூர்நாட்டு உடையார் திருவிடை மருதுடையார் கோயில் ஆதி சண்டேசுரதேவர்கள்... ... ... ... ஸ்ரீ விக்கிரமசோழ சதுர்ப்பேதி மங்கலத்து கோமடத்து பிருகிபாணிபட்டனும் எண்... ... ...யை சிவன்பெருந்தேவிச்சானியும் விச ... ... ரம் தன்மதான

பிரமாண இசைவுதிட்டு இற்றைநாளால் என் காணி யாய் இஞ்நாயறுற்கு திருநாமத்துக்காணியாகக் குடுத்த இவ்வூர்ப் பிடாகை கச்சுகொட்டியான... ... ...துங்க ... ... ... ... புவனம் முழுதுடை வதிக்கு ... ... ... காலுக்கு வடக்கும் இக் கண்ணாற்று முதல் சதிரத்து கிழக்கடைய நிலம் மும்மாவரை நீக்கி இதன் மேற்கு ஊர்ப்படி நிலம் மாகாணியும் இவ்வதிக்கு மேற்கு கருவி ... ... ... வாய்க்காலுக்கு வடக்கு முதல் கண் ணாறும் இரண்டாங் கண்ணாறும் நிரவிய இரண்டாஞ் சதிரத்துண்டத்து மேற்கடைய நிலம் காணி அரைக் காணி முந்திரிகைக்கீ ... ... ... மாவும் ஆக நிலம் ஒரு ... ... ... ... எண்ணூற்று எண்பத்து மூன்றுமா திரு நாமத்துக் காணியாகக் குடுத்து இப்படிக்கு நான் எழுதி எழுத்திட்டு அறிவுக்கு இவ்வூர்ச் சபையாரில் வேண்டுவோர் எழுத்தும் இடுவித்து ஸ்தாநம் ஸ்ரீ பண்டாரத்து ஒடுக்கினமைக்கும் இவை கோமடத்து பிஞகி பாணிபட்டனென் இவை ... ... ... து,

*இடம் :-* முன் இடமே.

*அரசன் :-* கோப்பெருஞ்சிங்கன்.

*செய்தி :-* விக்கிரமசோழ சதுர்ப்பேதி மங்க லத்துக் கோமடத்துப் பிஞகிபாணிபட்டனும் அவன் மனைவியும் மனம் இசைந்து, திருநாமத்துக்காணியாக கச்சு கட்டு முதலான இடங்களில் எண்ணூற்று எண் பத்து மூன்றுமா நிலம் அளித்துள்ளார்கள்.

*பொருள் விளக்கம் :-* கன்னி ஞாயறு - புரட்டாசி மாதம். திருநாமத்துக்காணி - சிவன் கோயிலுக்கு விடப்பட்ட வரியில்லாத நிலம்.

# 7. விக்கிரமசோழன் சாசனம்

(No. 700 A. R. No. 136 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரமசோழ தேவற்கு யாண்டு சு-ஆவது நம் பிராட்டியார் நேரியன் மாதேவியார் அகப்பரிவாரத்துக் கைக்கோளன் சோறுடையான் அடுக்கனை அன்பராபரணமாராயந் உடையார் திரு விடைமருதுடையார்க்குச் சந்திராதித்தவல் பலிசை செகுத்துச் செல்வதாக வைத்த சந்தி விளக்குக்கு ஸ்ரீபண்டாரத்துக்கு ஒடுக்கின காசு க-க்கு க. இது எரிக்க ஒடுக்கின குத்துவிளக்கு க -க்கு நெ. சுசு. பந்மாஹேஸ்வரரக்ஷை.

*இடம் :- இரண்டாவது பிரகாரம் தெற்குச்சுவர்.*

*அரசன் :- விக்கிரமசோழதேவன். இவன் பட்டந் துக்குவந்த ஆறுவது ஆட்சி ஆண்டில் இக்கல்வெட்டு வெட்டப்பட்டது.*

*விக்கிரம சோழனுக்கு, முக்கோக்கிழானடிகள் தியாகபதாகை என்னும் மனைவியர் இருவர் இருந்த னர். முக்கோக்கிழானடிகள் 1126-27ல் காலஞ் சென்றபிறகு தியாகபதாகையே பெருந்தேவியாக விளங்கிவந்தனள். இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டி ருக்கும் நேரியன்மாதேவியார் மூன்றுவது மனைவி போலும்.*

*செய்தி :- சந்திவிளக்கு எரிக்க ஒரு காசு கொடுத் துள்ளான் அன்பராபரண மாராயன். குத்துவிளக்கு ஒன்று. கொடர் நெ. 46.*

## 8. விக்கிரமசோழன் சாசனம்

(No. 701 A. R. No. 137 of 1895)

ஸ்வஸ்தி ஸ்ரீ விக்கிரமசோழதேவற்கு யாண்டு சு- ஆவது தொண்டைநாடான ஜயங்கொண்ட சோழ மண்டலத்துக் காஞ்சிபுரத்து திருவேகம்பமுடையார் தளியிலாள் கமளிமகள் நக்கங்சாணி உடையார் திரு விடைமருதூருடையார்க்குச் சந்திராதித்தவல் பலி செகுத்து இரா திருநுந்தா விளக்கு எரிக்க ஸ்ரீபண்டா ரத்து ஒடுக்கின காசு ரு. இது பங்மாகேஸ்வரரக்ஷை. குத்துவிளக்கு க -க்கு ரெ. அம.

*இடம் :-* முன் இடமே.

*அரசன் :-* விக்கிரமசோழதேவன். இதுவும் இவ னது ஆருவது ஆட்சி ஆண்டில் ஏற்படுத்தப்பட்டதே.

*செய்தி :-* தொண்டைநாட்டு ஜயங்கொண்ட சோழமண்டலத்துக் காஞ்சீபுரத்துக் காமளி மகள் நக்கன்சாணி என்பவள் இரவில் திருநுந்தா விளக்கு எரிக்க ஒரு காசு கொடுத்துள்ளாள்.

## 9. விக்கிரமசோழன் சாசனம்

(No. 702 A. R. No. 138 of 1895)

ஸ்வஸ்தி

பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்
பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்
திருநில மடந்தையொடு ஜயமக ளிருப்பத்

தன்வரை மார்பந் தனதெனப் பெற்றுத்
திருமக ளொருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறும்
திகிரியொடு செங்கோல் நடப்ப அகில
புவனமுங் கவிப்பதோர் புதுமதி போல
வெண்கொடை யடிமிசை நிழற்றக் கருங்கலி
யொளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்தி
தெலுங்கவீமங் விலங்கல்மிசையேறவும் [டைத்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கி
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளித் தென்றிசைத்
தருமமும் தானமும் தவமும் தழைப்ப
வேதமும் மெய்ம்மையும் ஆதியுகம் போலத்
தலைத்தலை சிறப்பவந் தருளி வெலற்கரும்
போர்ப்புலி யாணை பார்த்திவர் சூட
நிறைமணி மகுடம் முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய்போல்
தண்ணளி பரப்பி மனுநெறி வளர்த்துத்தன்
கோயிற் கொற்ற வாயிற் புறத்து
மணிநா வொடுங்க முரசுகண் முழங்க
விஜயமும் புகழும் மேன்மேல் ஓங்க
செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடல்புக
அழிதரு சிங்களர் அஞ்சிநெஞ் சலமர
கங்கர் திறையிடக் கன்னடர் வெந்நிட

கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்
றெத்திசை மன்னரும் தத்தமக் கரணெனத்
திருமலர்ச் சேவடி உரிமையில் இறைஞ்சத்
தொல்லையே மூலகுந் தொழுதெழத் தோன்றிய
முல்லை வாணகை முக்கோக் கிழானடி
உமையொடு சங்கரன் இமயத் திருந்தெனப்
பொருந்தி யுடனிருப்பக் கங்கையொப் பாகிய
தெரிவையர் திலதம் தியாக பதாகை
புரிகுழல் மடந்தை புனிதகுண வனிதை
திரிபுவன முழுதுடை யாளிவள் திருவுளத்
தருள்முழு துடையா ளென்றுட னிருப்பச்
செம்பொன் வீர ஸிம்ஹா ஸனத்து
முக்கோக்கிழா னடிகளொடும் வீற்றிருந் தருளிய
கோப்பரகேஸரிபன்மரான திருபுவன சக்ரவர்த்தி
ஸ்ரீ விக்கிரமசோழதேவர்க்கு, [கள்

யாண்டு ௬-ஆவது ரிஷபஞாயற்றுச் சுக்கிலபட்சத்து அஷ்டமியும் திங்கட்கிழமையும் பெற்ற சதயத்துநாள் உய்யக்கொண்டார் வளநாட்டுந் திரைமூர்நாட்டு அதி ராஜேந்திர சதுர்ப்பேதி மங்கலத்து மஹாஸபையோம் நம்மூர் உடையார் மணியம்பலமுடையார் கோயி லிலே எம் கூட்டம் குறைவறக் கூடியிருந்து உடை யார் திருவிடைமருதூருடையார்க்கு மூலஸ்தான ராகிய ஆதிசண்டேஸ்வரதேவற்கு நாங்கள் ஸாஸ் வதீகமாக இறையிலிசெய்துகுடுத்த நிலமாவது, இவ் வூர் தென்பிடாகை வடுகமாங்குடியில் கவுசியன் நாரா யணன் ஸ்ரீ கர்ஷன்பக்கல் விலைகொண்டுடையரான நிலமும் கவுசியன் நாராயணன் திருவாலிபக்கல் விலை

கொண்டநிலமும் பாரதாய திருச்சிற்றம்பலமுடையான் நாராயணன் கவார்க்கணியதாய் இவ்யாண்டு நாலாவது தன்போகத்தை யறுத்துக் குடியோடிப்போன இவன் நிலம் ஸபையார்பக்கல் இவன் விலைகொண்டுடைய ரான நிலமும் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு இருபத்தைஞ்சாவதுமுதல் நிலைநின்று இறை யிருதே குடியோடிப்போய் அந்நிலத்துக்கு ஊரில் நின் ருற்கு இறுக்க வேண்டினமையில் ஸபையார்பக்கல் ஸபை விலையாக விற்றுக்குடுத்த கவுணியன் பிரா மணி தேவதத்தன் நிலமும் ஆக இவற்கு ஸாஸ்வதிக மாக இறையிலி செய்துகுடுத்த நிலத்துக்குக் கீழ்பாற் கெல்லை கவுணியன் சேட்டன் ஜாதவேதநும் வேயன் கோவலன் நாராயணநும் கவுணியன் மயிந்நாராயண நும் உள்ளிட்டார் நிலத்துக்கு மேற்கும் தென்பாற் கெல்லை கவுணியன் மயிந்நாராயணன் உள்ளிட்டார் நிலங்களுக்கு நீர்பாயும் உட்சிறு வாய்க்காலுக்கும் திருச்சிற்றம்பல வாய்க்காலுக்கும் வடக்கும் மேல்பாற் கெல்லை உடையார் திருவிடைமருதுடையார் தேவ தாநமாந நாட்டுப்போக்கு ஆன நிலத்துக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை திருவேங்கட வாய்க்காலுக்குத் தெற் கும் ஆக இவ்விசைந்த பெருநான்கெல்லையுள் நடுவுட் பட்ட நிலம் இவ்வூர் நில முதல்பொத்தகத்தின்மேல் கிடந்தபடியே நூற்றிருபத்தெட்டுக் குழிகொண்டது ஒரு மாவாக ஒன்றே முக்காலே மாகாணி அரைக் காணிக் கீழரையில் நடுவடைய வடக்கிட்டு வாய்க்கா லுக்கு எங்களூர் ஸ்ரீ வைகுந்தவிண்ணகர ஆழ்வார்க்கு நிலம் காலே ...... க்காணிநிலம் நீக்கி நாங்கள் இவற்கு இறையிலி செய்து குடுத்த நிலம் ஒன்றரையே மாகாணி முந்திரிகையினுல் திருவுலகளந்தருளினபடி

பன்னீரடிக்கோலால் நூறு குழி கொண்டது ஒரு மாவாக ... ... இருவேலியும் இந்நிலத்து நின்ற துரவு கிணறுகளும் அகப்பட விற்றுக்குடுத்து இளங்காரி குடையான் சங்கரதேவன் சிவலோகநாயகனான கங்கை கொண்ட சோழ அனந்தபாலர் உடையார் திருவிடை மருதுடையார் திருமடைவிளாகத்துப் பெருந்திரு வாட்டியென்று செய்வித்த மடத்துக்கு தைப்பூசத் திருநாளில் மனித்தர் நித்த நிமித்தத்துக்கு ஆண்டார் களையும் சிவயோகிகளையும் தபஸியரையும் அமுது செய்விக்கைக்கு மடப்புறங்கொண்டு இறையிலி செய் கைக்கு...திருவிடைமருதுடையார் கோயிலில் ஒடுக்கி வைத்த காசில் இந்நிலத்துக்கு இறை காவலுக்குக் கொண்ட காசு கசுஎ. இக்காசு நூற்றறுபத்தேழினுல் காசொன்றுக்குப் பொன் ராஜராஜன் மாடையோ டொக்கும் பொன் குடினைக்கல்லால் பொன் ஆறு மஞ்சாடியும் குன்றியாக ... ... பொன் நாற்பத்து முக்கழஞ்சே முக்காலே ஆறுமாவும் கொண்டு இந் நிலம் சந்திராதித்தவற் ... ... க்கெ இறையிலி செய்து குடுத்து இந்நிலத்துக்குப் பெருவரி சில்வரி வெட்டி முட்டையாள் திருவாசலில் போந்த கடமை மற்றும் எப்பேர்ப்பட்டதும் செய்யக்கடவரல்லாதாராகவும் இந்நிலம் இப்பரிசே கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளப் பெறுவாராகச் சம்மதித்து இறையிலி செய்து குடுத்தோம். உடையார் திருவிடைமரு துடையார் மூலஸ்தானத்தாராகிய ஆதிசண்டேஸ்வர தேவற்கு அதிராஜேந்திர சதுர்ப்பேதிமங்கலத்து மஹா ஸபையோம் எழுத்து. ஸபையுள்ளிருந்து பணித்தார் கவுசியன் நாராயணன் ஸ்ரீ வாசுதேவ பட்ட ... ... ரது ... ... ஸியர் பணியாலும் பாரதாய நாராயணன் பத்ம

நாபன் பணியாலும் கவுணிய நாராயணன் ஸ்ரீ கிருஷ்ண ஞர் பணியாலும் ... ... திருநந்தனவுடையான் திருவ ரங்கன் பண்ப்பணியாலும் கவுசியன் திருநந்தனவுடை யான் வாசுதேவநார் பணியாலும் கவுசியன் இரையான் சங்கரநாராயணஞர் .... ... ...

*இடம் :-* முன் இடமே.

*அரசன்:-* விக்கிரமசோழதேவன். இவனது நாலா வது ஆட்சி ஆண்டில் இது வெட்டப்பட்டது.

*மெய்க்கீர்த்தியில் கண்டுள்ள வெற்றிகள் :-* (1) தெலுங்கவீமன் மலைமிசை ஒளிந்தமை, (2) கலிங்க நாடு எரியூட்டியமை, (3) வேங்கிநாட்டை வென் றமை, (4) பாண்டியர், சேரர் தோல்வி, (5) ஈழம் வென்றமை, (6) கங்கர், கன்னடர் இவர்கள் அடி பணிந்தமை முதலியன.

*செய்தி :-* திருவிடைமருதூர் திருமடவிளாகத் தில் பெருந்திருவாட்டி என்ற பெயருள்ள மடத்துக் குத் தைப்பூசத் திருநாளில் மனித்தர் நித்த நிமந்தத் துக்கும், அடியார்கள் சிவயோகிகள் தபசிகள் ஆகி யோர்க்கு அமுது ஊட்டுவதற்குமாக இரண்டுவேலி நிலம் அதற்கு உட்பட்ட துரவு கிணறுகளையும் நாற் பத்து மூன்று கழஞ்சு முக்கால் ஆறுமா கொடுத்து வாங்கி இறையிலியாகக் கொடுத்துள்ளான். இதன் வருவாயைக்கொண்டு இத்தன்மம் செய்யவேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளான்.

*பொருள் விளக்கம் :-* திகிரி - ஆக்ஞாசக்கரம். கலி - வறுமை. விலங்கல் - மலை. ஐம்படை - காத்தற் கடவுளாகிய திருமாலுக்கு உரிய ஐந்து ஆயுதங்கள்;

இவைகளைக் குழந்தைகளுக்கு அணிதல் மரபு. பார்த்திபர் - அரசர். மணி நா ஒடுங்க - அரண்மனை வாயிலில் கட்டப்பட்ட ஆராய்ச்சிமணியினது நாக்கு ஒலியின்றிக் கிடப்ப. மணி ஒலித்தல் கூடாது என்பதை மனுநீதிச்சோழர் வரலாற்றால் அறியலாம். செழியர்-பாண்டியர். வெந்நிட-புறங்கொடுத்தோட. அரண் - பாதுகாவல். வாள்நகை - ஒளிபொருந்திய பல். ரிஷப ஞாயறு - வைகாசிமாதம். நித்தநிமந்தம் - நாட்சோறு, விசேடநாளில் அளிப்பது.

*பொதுக்குறிப்பு* :- மணியம்பலமுடையார் கோயிலில் கூட்டம் கூடிச் செய்த முடிபுகள்: (1) தென்பிடாகை வடுகமாங்குடியில் கவுசியன் நாராயணன் ஸ்ரீகர்ஷன்பக்கல் விலைக்கு வாங்கிய நிலம், (2) கவுசியன் நாராயணன் திருவாலிபக்கல் விலைக்கு வாங்கிய நிலம், (3) திருச்சிற்றம்பலமுடையான் நாராயணன் குடியோடிப்போனன் அவன் நிலம், (4) கவுணியன் பிராமணி தேவதத்தன் வரிசெலுத்தாமையால் அவன் நிலம்; ஆக இந்நால்வர் நிலத்தையும் இறையிலிசெய்து கொடுத்தான். இதனின்று பண்டைய அரசர்களின் ஆட்சிச் சிறப்பும், அறஞ்செய்யும் திறமும் ஒருவாறு விளங்கும்.

## 10. விக்கிரமசோழன் சாசனம்

(No. 703 A. R. No. 139 of 1895)

**ஸ்வஸ்திஸ்ரீ**
**பூமாலை மிடைந்து பொன்மாலை திகழப்**
**பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்**
**திருநில மடந்தையொடு ஜயமக ளிருப்பத்**
**தன்வரை மார்பந் தனதெனப் பெற்றுத்**

திருமக ளொருதனி யிருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறும்
திகிரியொடு செங்கோல் நடப்ப அகில
புவனமுங் கவிப்பதோர் புதுமதி போல
வெண்கொடை யடிமிசை நிழற்றக் கருங்கலி
யொளித்துவன் பிலத்திடைக் கிடப்பக் குளத்தி
தெலுங்கவீமங் விலங்கல்மிசையேறவும் [டைத்
கலிங்க பூமியைக் கனலெரி பருகவும்
ஐம்படைப் பருவத்து வெம்படை தாங்கி
வேங்கை மண்டலத் தாங்கினி திருந்து
வடதிசை யடிப்படுத் தருளித் தென்றிசைத்
தருமமும் தானமும் தவமும் தழைப்ப
வேதமும் மெய்ம்மையும் ஆதியுகம் போலத்
தலைத்தலை சிறப்பவங் தருளி வெலற்கரும்
போர்ப்புலி யாணை பார்த்திவர் சூட
நிறைமணி மகுடம் முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய்போல்
தண்ணளி பரப்பி மனுநெறி வளர்த்துத்தன்
கோயிற் கொற்ற வாயிற் புறத்து
மணிநா வொடுங்க முரசுகண் முழங்க
விஜயமும் புகழும் மேன்மேல் ஓங்க
செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடல்புக
அழிதரு சிங்களர் அஞ்சிநெஞ் சலமர
கங்கர் திறையிடக் கன்னடர் வெங்கிட
கொங்க ரொதுங்கக் கொங்கணர் சாயமற்

றெத்திசை மன்னரும் தத்தமக் கரணெனத்
திருமலர்ச் சேவடி உரிமையில் இறைஞ்சத்
தொல்லையே ழுலகுந் தொழுதெழத் தோன்றிய
முல்லை வாணகை முக்கோக் கிழானடி
உமையொடு சங்கர னிமய சிமயத்
திருந்தன னென்னப் பொருந்தியுட னிருப்ப
அங்கவன் மகிழும் கங்கையொப் பாகிய
தெரிவையர் திலதம் தியாக பதாகை
புரிகுழல் மடந்தை புனிதகுண வனிதை
திரிபுவந முழுதுடை யாளிவள் திருவுளத்
தருள்முழு துடையா ளென்றுட னிருப்பச்
செம்பொன் வீர ஸிம்ஹா ஸனத்து
முக்கோக்கிழா னடிகளொடும் வீற்றிருந்தருளிய
கோப்பரகேஸரிபந்மரான திருபுவன சக்ரவர்த்தி
ஸ்ரீ விக்கிரமசோழதேவர்க்கு. [கள்

யாண்டு ஏ-வது உடையார் ஸ்ரீ குலோத்துங்க சோழதேவற்கு நன்றாக உடையார் சிவஸ்வாமிதேவர் ஸ்ரீகண்டசிவர் விருதராஜபயங்கர வளநாட்டு மண்ணி நாட்டுச் சோழமார்த்தாண்ட சதுர்ப்பேதிமங்கலத்துப் பிடாகை மங்கலக்குடியிலெழுந்தருளுவித்த உடையார் குலோத்துங்கசோழேஸ்வரமுடையார்க்கு வேண்டும் நிமந்தங்களுக்கு இறையிலியாக இவ்வூர் பிராம்மணன் காராம்பிச்செட்டுத் திருவரங்க நாராயணபட்டனும் பசிண்டிப்புறத்து எஜ்ஜமுந்திபட்டனும் உள்ளிட்டார் பக்கல் இத் தேவர் தேவகன்மி ஆரியன் வாஸ தேவபட்டன்பேரிலும் உடையார் ஸ்வாமி தேவர் ஸ்ரீகண்டசிவர் உடையார் கன்மிகள்பேரிலும் விலை

கொண்டுடைய பிரமாணப்படி நிலமாய் முன்னுடை யாரும் பழம்பெரும் சாஸ்வதமாய் வருகின்றபடியுந் தவிர்ந்து இத்தேவர்க்கு யாண்டு ஆறுவது முதல் தேவதானம் இறையிலியாய் வேறுபிறந்த விக்கிரம சோழநல்லூரிலும் அஞ்சரையே நாலுமாவின் கீழரை யினுல் நிலவோபாதி பழவிறை நெல்லு முந்நூற்றறுபத் தைங்கலனே பதக்கு நாழி நிச்சயித்த ஒருபாதி நெல்லு இருநூற்றெண்பதின் கலம் இதனுள் இத் தேவர் ஸ்ரீ கோயிலும் திருமுற்றமும் திருக்குளமும் மடவிளாகமுமாய் யாண்டு ஆறுவதுமுதல் நீங்கலுக்கு உடலாக நீக்கின நிலம் ஒன்பதுமா அரைக்காணி முந்திரிகையினுல் நிலவோபாதிப் பழவிறை நெல்லு இருபத்தறுகலனே தூணிப்பதக்கு நாழி நிச்சயித்த ஒருபாதி நெல்லு இருபத்திருகலனே எழுகுறுணி யிரு நாழி நீக்கி நிலம் அஞ்சே நாலுமா முக்காணி முந்திரி கைக் கீழரையினுல் நெல்லு முந்நூற்று முப்பத்தைங் கலனே இருதூணி நிச்சயித்த ஒருபாதி நெல்லு இரு நூற்றைம்பத்தெழுகலனே தூணியறுநாழிதர வொரு பாதிப் பழவிறைநெல்லு முந்நூற்று முப்பத்தெண் கலனே முக்குறுணி நாழி நிச்சயித்த ஒருபாதிநெல்லு இருநூற்றைம்பத்தொன்பதின்கலனே தூணிப்பதக்கு நாழி இவை புரவரித்திணைக்களநாயகம் நெற்புக்கை யுடையான் எழுத்து. இவை புரவரித்திணைக்கள நாயகம் உவலூர்நாட்டு வேளானெழுத்து. இவை புரவரித்திணைக்கள நாயகம் நாங்கொற்றனெழுத்து. இவை புரவரித்திணைக்களத்து முகவெட்டி கொற்ற வாயிலுடையான் எழுத்து. இவை புரவரித்திணைக் களத்து முகவெட்டி உலக.

*இடம்: முன் இடமே.*

*அரசன் :-* விக்கிரமசோழதேவன். இவனது ஏழாவது ஆட்சி ஆண்டில் ஏற்பட்டது இக்கல்வெட்டு.

*செய்தி :-* விருதராஜபயங்கரவளநாட்டு மண்ணி நாட்டுச் சோழமார்த்தாண்ட சதுர்ப்பேதி மங்கலத்துப் பிடாகை மங்கலக்குடியில் எழுந்தருளுவித்த உடையார் குலோத்துங்க சோழேஸ்வரமுடையார்க்கு நிவந்தமாக இறுப்பதற்குக் காராம்பிச்செட்டு திருவரங்க நாராயணபட்டன் பசிண்டிப்புறத்து எஜ்ஜமுத்திபட்டன் இவர்களிடமிருந்து நிலம்வாங்கி, தேவகன்மி ஆரியன் வாசுதேவபட்டன்பேரிலும், ஸ்வாமிதேவர் ஸ்ரீ கண்டசிவர்பேரிலும் பிரமாணப்படி சாசனம் எழுதிக்கொடுத்தான். எல்லாவகையான உரிமையும் நீக்கி நிச்சயித்த நெல் இருநூற்றைம்பத்தொன்பது கலனே தூணிப்பதக்கு நானாழி.

## 11. விட்டலதேவமஹாராயர் சாசனம்

( No. 704 A. R. No. 140 of 1895 )

சுபமஸ்து. ஸ்வஸ்திஸ்ரீமங் மஹாமண்டலேஸ்வர சதுசமுத்திராதிபதி ஸ்ரீமங் சதாசிவதேவ மஹாராயர் பிருதுவிராச்சியம் பண்ணியருளாநின்ற சகாத்தம் 1466-ன் மேற்செல்லாநின்ற குரோதி சம்வத்ஸரத்து மீனஞாயற்றுப் பூருவபட்சத்து உத்துவாநத் துவாதசியும் சோமவாரமும் பெற்ற உத்திரட்டாதி நட்சத்திரத்து நாள் வீரப்பிரதாப ஸ்ரீமது மஹாமண்டலேஸ்வர இராஜ இராஜ விட்டலதேவ மஹாராயர் சோழமண்டலத்துக் காவேரிதீரத்துத் தென்கால் உய்யக்கொண்ட சோழவளநாட்டுத் திரைமூர் நாட்டுத் திருவிடைமருதூர் திருவிடைமருதூருடைய தம்பிரானுக்குத் தர்மசிலாசாஸனம் பண்ணிக் குடுத்தபடி

மருதப்பர் திருநாமத்துக்காணியாய் பூருவம் நடந்த புத்து ஆற்றுக்கு வடக்கு ஆவணமும் சிற்றுடியும் இந்த இரண்டு கிராமமும் பூருவம் கோயிற்பற்றாக நடக்கையிலே அந்நாளிலே பண்டாரவாடைகாரர் கட்டிக்கொண்டு பண்டாரவாடை ஆகப்போகையில் இப்பொழுது இதுகாரியமாக திருவிடைமருதூருடைய தம்பிரானுர் திருக்கோயில் தேவகன்மிகளில் திருச் சிற்றம்பலபட்டர் மங்கர்மற் காத்தார் இந்நயினுர் கோயிற்பற்று என்று நமக்கு விண்ணப்பஞ் செய்து நாம் திருவடிபேரிலே தண்டு வந்த பொழுது நம் முடனேகூட தெற்கு அனந்தசயனம் வடக்கு முது கல்லு ஸகிதமாகத் தண்டுபண்ணி பூருவம் கோயிற் பற்று என்று பலகாலும் நமக்கு விண்ணப்பஞ் செய்து நாமும் அந்தக் கிராமங்களிலே மருதப்பர் முத்திரை எல்லைக்கல்லு நிற்கிறது உண்டோ என்று நம்முடைய முத்திரைவாங்கி இலிங்கயர் மனுஷரையும் தூளி நயினு ரையும் நாம் முதுகல்லிலே இருந்து திருச்சிற்றம்பல பட்டர் சொன்னுப்போலே எல்லைக்கல்லு நிற்குதோ என்று பார்க்க அனுப்பிவரக்காட்டி விசாரித்துப் பூருவம் கோயிற்பற்று என்கிறதுக்கு இரண்டு ஊரிலும் கல்லு நிற்குது என்று பார்த்துவந்து நமக்கு விண்ணப் பஞ் செய்கையில் நாமும் அந்தப்படிக்கு இராயஸமும் வாங்கிக் குடுத்து சங்கிரம புண்ணிய காலத்திலே திருச்சிற்றம்பலபட்டர் கையிலே உதகம் பண்ணிக் கொடுத்து நம்முட இராயஸமும்.........

*இடம் :-* முன் இட்டமே.

*அரசன் :- சதாசிவ தேவ மஹாராயர். (மாகாண அதிகாரி) விட்டலதேவ மஹாராயர்.*

*சாசனகாலம்:-* சகம் 1466 ஸு பங்குனி மீ திங்கட்கிழமை உத்திரட்டாதி நட்சத்திரம்.

*அரசரைப்பற்றிய குறிப்பு:-* விட்டலதேவ மஹாராஜா தன்னை மஹாமண்டலேஸ்வரர் என்று குறிப்பிட்டுக் கொள்வதால், ஒரு மாகாண அதிகாரியாயும், சிற்றரசராயும் இருந்திருக்கவேண்டும். இவருடைய ஆட்சிக்காலம் கி. பி. 14-ம் நூற்றுண்டு.

*செய்தி:-* விட்டலதேவ மஹாராயர் காவிரிநதியின் தென்பாலுள்ள திருவிடைமருதூரில் வந்து தங்கிச் செய்த நீதி விசாரணை.

கோயில் தேவகன்மி திருச்சிற்றம்பல பட்டர் பூர்வம் திருநாமத்துக்காணியான ஆவணம் சிற்றுடி இரண்டு கிராமங்களையும் (இக்கிராமம் புத்தாற்றுக்கு வடக்குள்ளது) பண்டாரை வாடைகாரர் கட்டிக் கொண்டார் என்று விண்ணப்பம் கொடுத்தார்.

விண்ணப்பத்தை ஏற்ற அரசர், தண்டுடன் வந்து பூர்வம் பலமுறைவந்த விண்ணப்பங்களையும் ஒப்பிட்டு, மருதப்பர் முத்திரைக்கல் நிறுத்தப்பட்டுள்ளதா என்று நம் முத்திரையும் இலிங்கயர் மனுஷரையும் தூளி நயினுரையும் நம் முத்திரைக்கல்லிலே இருந்து பார்த்துவர அனுப்ப, திருச்சிற்றம்பல பட்டர் விண்ணப்பம் உண்மை என்றும், மருதப்பர் முத்திரை எல்லைக்கல்லு இரண்டு ஊரிலும் நிறுத்தப்பட்டுள்ளது என்றும் அதிகாரிகள் நேரில் பார்த்து வந்து நம்மிடம் சொல்ல, நாமும் அவ்விரண்டு கிராமங்களையும் திருச்சிற்றம்பலபட்டர் கையில் உதகம் பண்ணிக்கொடுத்தோம். இது நம் இராயஸம்.

*அருஞ்சொற்பொருள் :-* மஹாமண்டலேஸ்வரர் - மாகாண அதிகாரி. பூருவம் - பண்டு. கோயில்பற்று - கோயில் நிலம். மீனஞாயறு - பங்குனிமாதம்.

*பொதுக்குறிப்பு :-* கோயில் காரியத்தார் கோயில் காரியங்களைக் குறைவின்றிக் கவனிப்பார்கள் என்பதும், கோயிலார் விண்ணப்பத்தை அரசனே நேரில் வந்து கவனிப்பான் என்னும் சிறப்பும் இக்கல்வெட்டினுல் விளக்கப்பட்டுள்ளன.

## 12. குலோத்துங்கசோழன் சாசனம்

( No. 705 A. R. No. 141 of 1895 )

ஸ்வஸ்திஸ்ரீ
பூமந்நு பதுமம் பூத்தவே ழுலகும்
தாம்முன்செய் தவத்தால் பருதிவழித் தோன்றி
நெடுமா லிவனெனச் சுடர்முடி சூடி
இருநில மகளை யுரிமையிற் புணர்ந்து
திருமகள் பணைமுலைச் செஞ்சாந் தணைந்து
பருமணி ஆரம் பனிவரை நிகர்ப்பச்
சயமகள் செழுந்தண் சந்தனச் சுவட்டால்
புயமிரு கயிலைப் பொருப்பெனத் தோன்ற
நாமகள் தானும் சோமகள் செவ்வாய்ப்
பவளச் சேயொளி படைத்தனன் யானென
தவள நன்னிறந் தனித்துடை யேனெனப்
புகழ்மகள் சிந்தை மகிழும் நாளிலும்
ஒருகுடை நிலவும் பொருபடைத் திகிரி

வெயிலும் கருங்கலி யிருளினைத் துரப்ப
நீடுபல் லூழி ஏழ்கடற் புறத்தினும்
கோடாச் செங்தனிக் கோலினி துலாவ
மீனமும் சிலையும் சிதைத்து வானுயர்
பொங்கெடு மேருவிற் புலிவீற் றிருப்ப
உம்பரி யானை ஓரெட் டினுக்கும்
தம்ப மென்னத் தனித்தனி திசைதொறும்
விஜய ஸ்தம்பம் நிற்பப் பசிபகை
யானது தீங்கு நீங்க
மன்னுயிர் தழைப்ப மனுவாறு விளங்க
மாதவர் தவமும் மங்கையர் கற்பும்
ஆதி யந்தண ராகுதிக் கனலும்
மீதெழு கொண்டல் வீசுதண் புனலும்
மேதினி வளருஞ் சாதி யொழுக்கமும்
நீதி யறமும் பிறழாது நிகழப்
பாவும் பழனப் பரப்பும் பணைக்கை
மாவு மல்லது வன்றளைப் படுதல்
கனவிலும் காண்டற் கரிதென வருந்திப்
புனலினும் பல்வேறு புள்ளினு மல்லது
சிறையெனப் படுத லின்றி நிறைபெருஞ்
செல்வமோ டவனி வாழப் பல்லவர்
தெலுங்கர் மாளுவர் கலிங்கர் கோசலர்
கன்னடர் கடாரர் தென்னர் சேரலர்
சிங்கணர் கொங்கணர் சேதியர் ஸ்ரீகர்த்தர்
வங்க ரங்கர் வத்தவர் மத்திரர்
கங்கர் சோனகர் கைகயர் சீனரென்

றழைகழல் வேந்தரு மெல்லா வரைசரும்
முறைமையில்வருந்தி திறைகொணர்ந்திறைஞ்ச
அம்பொன் மலர்க்கொடி செம்பியன் கிழானடி
ஒருமருங் குடனமர்ந் திருப்ப வருள்புரி
சிமயப் பொற்கொடி யிமயப் பாவையும்
சிவனும் போலப் புவனமுழு துடையாளொடும்
வீற்றிருந்தருளிய கோவிராஜகேஸரி பந்மரான
திருபுவனசக்ரவர்த்திகள்
ஸ்ரீ குலோத்துங்கசோழதேவற்கு,

யாண்டு கூ-ஆவது முதல் காணி பெற்றபடிக்கு பாணன் இருமுடிசோழந் பிராநான அசஞ்சலப் பெயர னுக்கு உய்யக்கொண்டார்வளநாட்டுத் திரைமூர்நாட்டு உடையார் திருவிடைமருதுடையார்க்குப் பாடவும் இக்கோயிலில் தளியிலார் தேவரடியாரைப் பாட்டுவிக் கவும் பாணரை இடக்கடவராக இவனுக்கும் இவன் வம்ஸத்தார்க்கும் இக்கோயில் பாண்பெருக முன்பு பெற்றுவரும் காசும் நெல்லும் உள்பட யாண்டு ஒன்ப தாவது முதல் நாள் ஒன்றுக்கு ஊர்க்காலால் நெல் கலமாக வந்த நெல்லு இக்கோயிலில் பலபணி நிவந்தக் காரரொடுங்கூட நிவந்தங்கட்டி இந்நெல்லுக்கு வேண் டும் நிலம் முந்நுடையாரைத் தவிர்த்து இத்தேவர் தேவதாநமான ஊர்களிலே பாணகாணியும் நிலஜீவித மும் ஆக அடைந்து முன்பு பாணர் குடியிருப்பான மனையும் இவனுக்கு விட்டு இப்படிக்குக் கல்வெட்டிக் கொள்வதாக ஒன்பதாவது முதல் பிரஸாதம் பெற்ற மைக்குப் பிரஸாதஞ்செய்தருளின திருமுகம் மலையப் பிராயரும், திருமந்திர ஓலை புதுக்குடையாரும் எழுத் திட்ட திருமுகப்படியும் புரவரி ஸ்ரீகரணத்து முக

வெட்டி நெடுமணமுடையானும் புரவரி ஸ்ரீகரண நாயகம் பொசநுழானும் புரவரி ஸ்ரீகரணமுகவெட்டி பண்ணை நல்லூருடையானும் புரவரி ஸ்ரீகரணமுக வெட்டி வேளாளர்கிழவனும் புரவரி ஸ்ரீகரணமுக வெட்டி அரசூருடையானும் புரவரி ஸ்ரீகரணநாயகம் செற்றூருடையானும் புரவரிக்கூறு பங்களராயரும் சிங்களராயரும் உயநாட்டரையரும் எழுத்திட்ட உள் வரிப்படி இத்தேவர் தேவதானமாக உய்யக்கொண் டார்வளநாட்டு திரைமூர்நாட்டு செம்பியங்குளத்தூரில் குலோத்துங்கசோழவதிக்கு கிழக்கு முஞ்சிக் கண்ணுற் றுக்குத் தெற்கு கிடாரங்கொண்ட சோழவதிக்கு மேற்கு தராப்பள்ளக்கண்டத்துக்கு வடக்கு நடுவிற் கண்டத்து நிலம் ஒன்றே முக்காலே அரைக்காணி முந்திரிகை கீழரையும்; இதன் தெற்கு கிடாரங் கொண்ட சோழவதிக்கு மேற்கு பிரமதேயம் திரைமூரெல்லைக்கு வடக்கு பாம்புணிகிழாங் நிலத் துக்கு கிழக்கு நிலம் முக்காலே நாலுமா அரைக்காணி முந்திரிகையும் ஆகநிலம் இரண்டரையே நாலுமாகாணி அரைக்காணி கீழரைக்கு நிலவோபாதியால் நெல் முந் நூற்று நாற்பத்தொன்பதின் கலத்து நாலுறை நாழி யெற்றி நெல் முந்நூற்றுபதின்கலத்துக்கும் இவை கோயிற்கணக்குக் குண்டையூர்க்கிழவன் எழுத்து. இப்படிக்கு இவை தேவர்கன்மி திருச்சிற்றம்பல பட்டன் எழுத்து. இப்படிக்கு இவை ஸ்ரீகாரியம் மூலங் குடையான் எழுத்து. இவை திருவிறி அன்பற்கரசங் எழுத்து. யாண்டு ௬௰-ஆவது செம்பியங் குளத்தூரில் தராப்பள்ளக்கண்டத்து பாம்புணிகிழாங் நிலத்துக்குக் கிழக்கு முன்பு உறைநாழிநெல்லுக்கென்று நீக்கி பின்பு புகுந்த நிலம்.........யும் ஆகநிலம் இரண்டேமுக்காலே

ஒருமாவரை அரைக்காணியினுல் நெல் மூந்நூற்றறுபதின் கலத்தாலும் இவை கோயிற்கணக்குக் குண்டையூர்க் கிழவனெழுத்து. இப்படிக்கு இவை தேவர்கன்மி திருச்சிற்றம்பலபட்டன் எழுத்து. இப்படிக்கு இவை ஸ்ரீகாரியம் மூலங்குடையான் எழுத்து. இப்படிக்கு இவை ஸ்ரீ மாஹேஸ்வர கண்காணி திருவாதி அன்பற்கரசந் எழுத்து.

***இடம் :-*** *முன் இடமே.*

*அரசன் :- முதற்குலோத்துங்கசோழதேவன். இது இவனது ஒன்பதாவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு.*

***மெய்க்கிர்த்தியில் காண்பன :-*** *பல்லவர், தெலுங்கர், மாளவர், கலிங்கர், தென்னர், கன்னடர், கடாரர், சிங்களர், வங்கர், மத்தமத்திரர் முதலாய அரசர்கள் தனக்குக் கப்பங்கட்டி வந்ததாகக் குறிப்பிட்டுள்ளான். இவ்வரசனின் பட்டத்து அரசி புவனமுழுதுடையாள் என்று தெரிகிறது.*

***செய்தி :-*** *பாணன் இருமுடி சோழன் பிரானுனை அசஞ்சலனுக்குக் கோயிலில் பாடவும் பாணரைப் பாடச்செய்யவும் நாள் ஒன்றுக்கு ஒருகலம் நெல்லும், குடியிருப்பு மனையும் இலவசமாக இவனுக்கும் இவன் வம்சத்தார்க்கும் பரம்பரையாக அனுபவித்துக்கொள்ளுமாறு உத்தரவிட்டான். இதற்கு விட்ட நிலம் இரண்டரையே நாலுமாகாணி. இதன் வருமானம் முந்நூற்றறுபது கலம்.*

***அரசியல் அலுவலர்கள் :-*** *(1) திருமுகம். (2) திருமந்திர ஓலை. (3) புரவரி ஸ்ரீ கரணமுகவெட்டி.*

*(4) புரவரி ஸ்ரீ கரணநாயகம். (5) புரவரிக்கூறு. (6) தேவகன்மி. (7) ஸ்ரீ கார்யம். (8) ஸ்ரீ மாஹேஸ்வரக் கண்காணி.*

*அருஞ்சொற்பொருள் :- பருதி - சூரியன் (சோழர் சூரிய குலம்). பாணன் - பாட்டுப் பாடுபவன். பல பணி - பலவகைத்தொண்டு. நிவந்தக்காரர் - மேற் கொண்டு செய்பவர். தேவதானம் - தெய்வங்கட்கு இறைநீக்கிக் கொடுத்த நிலம்.*

## 13. குலோத்துங்கசோழன் சாசனம்

(No. 706 A. R. No. 142 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனசக்ரவர்த்திகள் மதுரை கொண்டு பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளின ஸ்ரீ குலோத்துங்கசோழ தேவற்கு யாண்டு கஉ-ல் கசஈச-ஞல் பிரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி திரிபுவனசக்ரவர்த்தி கோனேரின்மை கொண்டான் உய்யக்கொண்டார் வளநாட்டு திரைமூர்நாட்டு உடையார் திருவிடைமருதூருடையார் கோயிலில் பதி பாத மூலப் பட்டுடை பஞ்சாசாரிய தேவகன்மிக்கும் கோயில் கணக்கனுக்கும் ஸ்ரீ மாகேஸ்வரக் கங்காணி செய்வார்களுக்கும் ஸ்ரீகாரியம் செய்வானுக்கும் இக் கோயில் உடுக்கை வாசிப்பார் பங்கு காணியுடைய எண்ணரியான் என்கிறவன்பக்கலே நம்மைச் சேவிக் கும் நட்டுவரில் குலோத்துங்கசோழ நிருத்த பெரையன் விலைகொண்டு அனுபவித்து வருகிற பங்கு இரண்டும் இவன் விலைகொண்ட பிரமாணப்படியே இவனுக்கும்

இவன் வர்க்கத்தாற்கும் காணியாய் அனுபவிக்கவும் இப்படிக்கு இக்கோயிலிலே கல்வெட்டவுங் கடவ தாகப் பெறவேணும் என்று இவன் நமக்குச் சொன் னமையில் இப்படி செய்யக்கடவதாகச் சொன்னேம். இப்பங்கு இரண்டும் எண்ணரியான் என்கிற இவன் பக்கல் இவன் விலைகொண்ட பிரமாணப்படியே இவ னுக்கும் இவன் வர்க்கத்தாற்கும் காணியாய் அனுப விப்பதாகவும் இப்படிக்கு இக்கோயில் திருமதிலில் கல் வெட்டலாம் இடத்திலே கல்வெட்டக் கடவதாக வும்; தெச்சுடையான் பக்கல் எண்ணரியான்கொண்ட பிரமாணத்திலே சியத்தனும் இவன் மக்களும் எழுத் துக் கிடக்கையாலும் எண்ணரியான்பக்கல் ஆடவல் லான் குலோத்துங்க நித்த பெரையன் கொண்ட பிர மாணத்திலே சியத்தனும் இவன் மக்களும் எண்ணரி யானும் இவன் மக்கள் எழுத்துக் கிடக்கையாலும் இப்பிரமாணத்திலே பதிபாத மூலப்பட்டுடை பஞ்சா சாரியத் தேவகன்மி கோயில் கணக்கன் எழுத்துக் கிடக்கையாலும் இப்பிரமாணங்களில் எழுதினபடியே பிரமாணப்படியே கல்வெட்டுக் குடுப்பது என்று திரு வாய்மொழிந்தருளினபடி திருமந்திர ஓலை மீனவன் மூவேந்தவேளார் எழுத குருகுலராயரும் வீணத்தரை யரும் வேணுடையாரும் நரசிங்கபன்மரும் பாண் டியராயரும் காடு வெட்டிகளும் வயிராதராயரும் களப்பாளராயரும் எழுத்திட்டு யாண்டு கஉ-ல் கசுச-ஞல் பிரஸாதஞ்செய்தருளிவந்தது.

*இடம் :- முன் இடமே.*

*அரசன் :- மூன்றுங்குலோத்துங்கசோழதேவன். இவன் 7-ஆவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு இது.*

*செய்தி:-* எண்ணரியான் என்ற உடுக்கை வாசிப் பானிடம் விலைக்கு வாங்கி அனுபவித்துவரும் நட்டுவ னாகிய குலோத்துங்கசோழ நிருத்தன் அவனும் அவன் வம்சத்தாரும் உடுக்கை வாசிப்பதற்கு ஏற்பட்ட காணி பங்கைப் பரம்பரையாக அனுபவிக்க உத்தர விட்டான்.

*பொருள் விளக்கம்:-* பிரஸாதஞ்செய்தருளின - கொடுத்தருளிய. திருமுகம் - கடிதம். பதிபாத மூலப் பட்டுடை பஞ்சாசாரியர் - கோயிலை நிர்வகிப்பதற் காகப் பூசை செய்வோரைக்கொண்ட சபையார். பிரமாணம் - உறுதிப்பத்திரம். காணி - சொந்தம்.

## 14. குலோத்துங்கசோழன் சாசனம்

(No. 707 A. R. No. 143 of 1895.)

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்ரவர்த்தி ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு உ-ஆவது உடையார் திருவிடை மருதூருடையார்கோயில் முதல் பிரகாரத்து மேலைத் திருமாளிகையில் பணிமுப்பிமாரில் ராஜராஜேஸ்வரத் துப் பதியிலாரில் அரிய பிராட்டி உதையபெருமாள் பெரியதேவர் திரிபுவனவீரதேவற்கு யாண்டு ருஎ-வது நாளில் எழுந்தருளுவித்த உடையார் பொருந்திய தைப்பூசமுடைய நாயனார்க்குப் பூசைக்கு உடையார் திருவிடைமருதூருடையார்தேவதானத்துத் திருநாமத் துக் காணியான நிலத்து இறைமிகுதி பூசைக்குடலாக இத்தேவர் திருநாமத்துச் சண்டேஸ்வரப் பெருவிலை யாகக் கொண்ட வண்ணக்குடியான குலோத்துங்க சோழ சதுர்ப்பேதி மங்கலத்து திருநாமத்துக் காணியில் விற்ற ஸ்ரீ வீரநாராயணவதிக்குக் கிழக்கு மதுராந்தக

வாய்க்காலுக்குத் தெற்கு ௫-க்கு க சதிரத்து கப்படக் கோவை என்று பெயருடைய நிலம் குழி உளஅ-ம் இங்கே விளாகம் என்று பெயருடைய ரெ. குழி ௬௯௬-ம் ஆக குழி எ௬௭-க்கும் திரைமூர் திரைமூருள்ளும் திரு நாமத்துக் காணியான நிலத்து விற்றதிரைமூர்கள் மூன் றுங் கண்டத்துக் குலோத்துங்கசோழவதிக்குக் கிழக்கு திருச்சிற்றம்பல வாய்க்காலுக்குத் தெற்கு கீழ் அசல் வேளூர் கிழவர் அம்மை அப்பர் உள்ளிட்டார் நிலத் துக்கு மேற்கும் தென் அசல் ஆறுங்கண்ணுற்றுந் தூர்த்துக்கிடக்கிற வாய்க்காலுக்கு வடக்கும் மேல் அசல் பொன்னம்பலநம்பி நிலத்துக்கும் பன்றிக்குளத் துக்கும் கிழக்கும் வட அசல் திருச்சிற்றம்பல வாய்க் காலுக்குத்தெற்கும் நடுவுட்பட்ட ரெ. குழி க௫அஉ-ம் பிருஹ்மதேயம் மூன்றுங்கண்டத்துக் குலோத்துங்க சோழவதிக்குக் கிழக்கு மருதமாணிக்க மயக்கல் என்று பெயருடைய நிலத்துக்குத் தென் அசல் வில்லவன் பிருஹ்மராயர் மகன் நிலத்துக்கு வடக்கும் மேல் அசல் வதிக்குக் கிழக்கும் வட அசல் ஆறுங்கண்ணுற்றுந் தூர்த்துக்கிடக்கிற வாய்க்காலுக்குத் தெற்கும் நடுவுட் பட்ட ரெ. குழி ௫ா-ம் நாலாம் கண்டத்துப் பரமேஸ் வர வதிக்கு மேற்கு சாத்தன் வாய்க்காலுக்குத் தெற்கு மணலி என்று பெயருடைய நிலத்துக்குக் கீழ் அசல் அனபாயவந்தணநம்பியும் ஹமுதவன் சூரியதேவன் பாரியை இளைய உமையாண்டாளும் நிலத்து மேற்கும் தென் அசல் இவ்வூர் எல்லைக்கு வடக்கும் மேல் அசல் திருவிடைமருது நகரத்து எல்லைக்கும் வட அசல் திருபாதிரிக்குட்பட்டநம்பி நிலத்துக்குத்தெற்கும் வடக்கும் கிழக்கும் இன்னமும் வடபாற்கெல்லை சாத்தன் வாய்க்காலுக்குத் தெற்கும் நடுவுட்பட்ட

நிலம் குழி ககஙய-ம் ஆக திரைமூரும் திரைமூருள்ளும் நிலம் குழி ஙஉகஉ-ம் ஆக வண்ணக்குடி உட்பட நிலம் குழி ஙசூஎசூ இநால் ரெ. ... ... ... ... இத்துக்கும் பிரமாண விலைப்படி காசு *சதூசசூ*-ம் உ-வது நாள் கஙஅ வரையும் சீபண்டாரத்து ஒடுக்கிவித்துக்கொண்டு இந்நிலம் ஒன்றேமுக்காலே நாலுமா முக்கால் சின்னமும் இந்தப் பொருந்திய தைப்பூசமுடையநாயனுற்குத் திருநாமத்துக்காணியாய் ஊரமர் ஈந்த கடமை குடிமைக்கு வேண்டுவது நீக்கி இறை மிகுதி பூசைக்குடலாக நிச்சயித்து விற்றமையில் இப்படி கல்லில் வெட்டுவித்துக்குடுக்க என்று பிள்ளை காலிங்கராயர் ஓலை வந்தமையில் இப்படியே இத்தேவற்கு இந்நிலம் திருநாமத்துக்காணியாய் இறை மிகுதி பூசைக்குடலாக நிச்சயித்தமைக்கு.

*இடம் :-* முன் இடமே.

*அரசன் :-* குலோத்துங்கசோழதேவன். இவனது இரண்டாவது ஆட்சி ஆண்டில் இந்தக் கல்வெட்டு ஏற்பட்டது.

*செய்தி :-* பதியிலார் அரியபிராட்டி என்பவள் முதல்பிரகாரத்து மேலைத்திருமாளிகையில் இருந்து தைப்பூசமுடையநாயனுற்குத் திருநாமத்துக் காணியாக வண்ணக்குடி என்னும் கிராமத்தை அளித்துள்ளாள்.

*நிலவிபரம் :-* (1) கப்படக்கோவை குழி 273, (2) விளாகம் குழி 494 ஆக 767; (3) பன்றிக்குளம் அடுத்த நிலம் குழி 1582, (4) மருதமாணிக்க மயக்கல் 500, (5) மணலி 1130 ஆக கூடுதல் நிலம் 3212,

*(6) வண்ணக்குடி உள்பட நிலம் 3979 கூடுதல் நிலம். இந்நிலங்களை ஊர்க்கடமை நீக்கிக் கொடுத்தோம்.*

*நான்கெல்லை :- குலோத்துங்க சோழவதிக்குக் கிழக்கு, மருதமாணிக்க மயக்கல் நிலத்துக்கும் வில்லவன் பிரஹ்மராயன் மகள் நிலத்துக்கும் வடக்கு, மேல் அசல் வதிக்குக் கிழக்கு, வட அசல் தூர்ந்து கிடக்கும் வாய்க்காலுக்குத் தெற்கு.*

*பொதுக்குறிப்பு :- நான்கெல்லைகளும், விட்ட நிலங்கட்குக் குழிக்கணக்குகளும் தெளிவாக இக்கல்வெட்டில் காணப்படுகின்றன.*

## 15. கோனேரின்மைகொண்டான் சாசனம்

(No. 708 A. R. No. 144 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்ரவர்த்தி கோனேரின்மை கொண்டான் உய்யக்கொண்டார் வளநாட்டு உடையார் திருவிடைமருதூருடையார் கோயில் பதி பாத மூலப்பட்டுடை பஞ்சாசாரியத் தேவர்கன்மிக்கும் ஸ்ரீ மாகேஸ்வரக் கண்காணி செய்வார்களுக்கும் ஸ்ரீ காரியஞ்செய்வானுக்கும் இத்தேவர் மேலைத் திருவீதிக்கு மேற்காக நத்தமாகக்கொண்டு இரும்மாவும் தூயபெருமாள் சதுர்ப்பேதிமங்கலப்பேரால் ஏற்றின அகரத்து பிராஹ்மணர்க்கும் பங்குக்கும் பட்டவிருத்தி கிடைப்புறம் உள்ளிட்டனவற்றுக்கும் உடலான நிலத்திலும் வாசஸ்தலமும் வாசஸ்தலபரிவாரமும் குளமும் கோபிரசாரபூமியுமாக உள்ளிட்டுச்செய்த நிலத்திலும் இத்தேவர் திருநாமத்துக்காணியில் அகப்பட்ட

நிலத்துக்குக் கோயிற்கணக்கு ஆதனூருடையான் எழுத்திட்ட கணக்குப்படி தேவதானம் உள்ளூர்களில் நிலம் ஒன்றே இரண்டுமா காணியும், எதிரிலி சோழ மங்கலம் நிலம் முக்காலே இரண்டுமாவும், பிருஹ்ம தேயம் திருக்குடமூக்கு ஊர்கீழ் இறையிலி நிலம் பத்தே எட்டுமாவும், யோகினியாகேஸ்வர இறையிலி சங்கம் தவிர்த்த சோழநல்லூரில் இறையிலி பிராப்தி உள்பட திருநாமத்துக் காணியாக விலைகொண்ட நிலத்து நிலம் ஆறுமாவும் ஆகநிலம் பனிரண்டரையே மூன்றுமா காணிக்கும் தலைமாறும் ஏற்றமாகவும் இத் தேவர்க்கு திருநாமத்துக்காணியாய் தேவதான இறை யிலியுமாக இடச்சொன்ன நிலத்துக்கு இந் நாட்டு நடாரான குலோத்துங்கசோழன் கருப்பூரில் துரோகம் செய்தாரை காணிமாறின நிலமும் பலரும் காணியான நிலத்து வத்தராயன் காணிநீக்கி நின்றநிலம் இவர்களைக் காணிமாறி இந்நிலம் உள்பட நிலம் பதினேழரையே நாலுமா காணியும் பதினெட்டாவது முதல் இத் தேவற்குந் திருநாமத்துக்காணியும் இறையிலியுமாய் நிற்கக் கடவதாகப் பெறவேணுமென்று களப்பாள ராயன் நமக்குச் சொன்னமையில் இப்படி செய்யக் கடவதாகச்சொல்லிக் கணக்கிலும் இட்டுக்கொள்ளக் கடவார்களாக. வரிக்குக் கூறுசெய்வார்களுக்கும் சொன்னோம். இந்நிலம் பதினெட்டாவது முதல் இத் தேவர்க்குத் திருநாமத்துக்காணியும் தேவதான இறை யிலியுமாகக் கொள்க எழுதினேன் திருமந்திர ஓலை மீனவன் மூவேந்தவேளான். இவை காங்கேயராயன் எழுத்து. இவை இலங்கேஸ்வரன் எழுத்து. இவை சேதிகுலராயன் எழுத்து. இவை கலிங்கராயன் எழுத்து. இவை விழுப்பாதராயன் எழுத்து. இவை செரிகுல ராயன் எழுத்துள் உ௲கூ-ஞல். ஸ்வஸ்திஸ்ரீ.

இடம் :- முன் இடமே.

அரசன் :- திருபுவனச் சச்ரவர்த்திகள் கோனேரின்மைகொண்டான்.

செய்தி ;- கோயில் பதிபாதமூலப் பட்டுடைப் பஞ்சாசாரியத் தேவகன்மிக்கும், ஸ்ரீ மாஹேஸ்வரக் கண்காணி செய்வார்கட்கும், ஸ்ரீ காரியம் செய்வார்க்கும் நிலம் அளித்தது.

மேலைத் திருவீதிக்கு மேற்காக நத்தமாகக் கொண்ட நிலம் 2 மா, தூயபெருமாள் சதுர்ப்பேதிமங்கலத்துக் கோயில் கணக்கு ஆதனூருடையான் எழுத்துப்படி கொண்ட நிலம் 1 மா 2, எதிரிலி சோழமங்கலம் ¾ மா 2, பிருஹ்மதேயம் திருக்குடமூக்கு (குடந்தை) ஊர் கீழ்பால் 10 மா 8, இறையிலி சுங்கம் தவிர்த்த சோழநல்லூரில் மா 6 ஆக நிலம் பன்னிரண்டரையே மூன்று மாக்காணி. குலோத்துங்கசோழதேவன் கருப்பூரில் துரோகம் செய்தார் காணி மாறின நிலமும் ஆக பதினேழரையே நாலு மாக்காணி நிலம் திருநாமத்துக்காணியாக அளித்துள்ளான்.

பொருள் விளக்கம் :- இறையிலி - வரியில்லாத நிலம். பிராத்தி - பேறு. தலைமாறு - பரிவர்த்தனை. ஏற்றம் - மிகுதி.

பொதுக்குறிப்பு :- ஊர்நத்தம், துரோகஞ்செய்தார் நிலம் இவைகள் இறைவனுக்குச் சொந்தமாக்கப்படும் என்பதும், சுங்கம் தவிர்த்த சோழநல்லூர் என்னும் பெயர்க்குறிப்பால் குலோத்துங்க சோழதேவன் காலக் கல்வெட்டாக இருக்கலாம் என்ற குறிப்பும் கொள்ளக்கிடக்கின்றது.

## 16. திருவிளக்குதர்மம்

( No. 709 A. R. 145 of 1895 )

ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிபன்மருக்கு யாண்டு ச-ஆவது இருமுடி சோழப் பெருமசக்கலான........ ...ங் கல்லி விளைநிலமாகக் கல்லித் திருக்கோயில் உடையார் சோழகோனுரிடை விளக்கு எரிக்கக் கொண்ட காசு ஐம்பது. இக்காசில் இவர்கள்கொண்டகாசு பத்து. இவர்களுக்கு இது பற்றுமையில் இக்காசுகொண்டு இவ்விளக்கு எரிப்பார் எரிப்பாரின்மையால்........... இளங்காரி வரகுணனு.........

*இடம் :- கோயில் மண்டபத்தின் தெற்குச்சுவர் முன்பக்கத்தின் நடுப்பகுதியில் உள்ள கல்வெட்டு.*

*செய்தி :- விளக்கெரிக்க 50 காசு கொடுத்ததாகவும், அதில் கொண்டது 10 போதவில்லை என்ற குறிப்பும் காணப்படுகிறது.*

## 17. திருவாதிரைதர்மம்

(No. 710 A. R. 146 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ மதுரைகொண்ட ஸ்ரீ கோப்பரகேசரி பன்மருக்கு யாண்டு கரு-வது தென்கரைத் திரைமூர் நாட்டு திருவிடைமருதில் ஸ்ரீ மூலத்தானத்துப் பெருமானடிகளுக்குத் தொண்டைநாட்டுச் செங்காட்டுக் கோட்டத்து மாகனூர்நாட்டு இடும்பேட்டை பண்டாரிகிழான் கொட்டி இரவு மார்கழித் திருவாதிரை தோறும் நெய்யாடி அருளுவதற்கு வைத்த பொன்

பதின்கழஞ்சுக்கும் அட்டுவதான பொலியூட்டு நெய் முப்பதுநாழியும் மார்கழித் திருவாதிரைதோறும் முட்டாமை ... ... ... தற்கு இப்பொன் பதின்கழஞ்சும் கொண்டோம். இத்திரு ... ... ... ... ... பாரதாயன் நாராயணன் எரிக் ... ... நாரா ... ... ... றவர் ... ...

*இடம் :- முன் இடமே.*

*செய்தி :- தொண்டைநாட்டுச் செங்காட்டுக் கோட்டத்து மாகனூரர் நாட்டு இடும்பேட்டை பண்டாரிகிழான் என்பவன் மார்கழித் திருவாதிரை இரவு நெய் அபிஷேகத்திற்கு வைத்த பொன் பதின் கழஞ்சு.*

*பொருள் விளக்கம் :- நெய் - எண்ணெய். அட்டுதல் - கொடுத்தல். முட்டாமை - தட்டுப்படாமை.*

## 18. திருவிளக்கு நர்மம்

(No. 711 A. R. No. 147 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ மதுரைகொண்ட கோப்பரகேசரி பந்மர்க்கு யாண்டு ௩எ-வது திருவிடைமருதில் மூலஸ்தானத்து மகாதேவர்க்கு ஒரு நொந்தாவிளக்குக்குப் புலியூர்க்கோட்டத்து மயிலாப்பில் வியாபாரி விளத்தூர் கிழவன் அரையன் அரிவலன்வைத்த பொன் இருபத்தைங்கழஞ்சு. இப்பொன் குடுத்து நான் இவ்வூர்த் திருக்கோயிலுடையான் பாரதாயன் சிங்கன்தேவனும் பாரதாயன் புறம்பன் நக்கனும் பாரதாயன் செங்தெனக்கனுமாக இம்மூவர்பக்கலும் நான் விலைகொண்டுடைய நிலம் இந்நாட்டுத் தேவதானம் திரைமூர்

இவர்களுடைய அர்ச்சனுபோகமான நிலத்தில் சுவரன் வாயின் தென்வாய்க்கண்ணாற்று அரைக்காலும் இதன் கீழ் மாகாணியும் ஆகநிலம் மூன்றுமாமுக்காணிச் செய்யுங்கொண்டு இந்நிலத்துக்குப் பஞ்சவாரம் ஆட்டை விட்டான் மாத்தால் இருகலமாக நெல்லு எழுகலனே தூணிப்பதக்கு இறைநீக்கி இதுவல்லது எப்பேற்பட்ட இறையும் எச்சோறும் வெட்டிவர்த்தினையும் நீக்கி இந்நிலத்தால்வந்த போகத்தால் நிசதி உழக்கெண்ணை யாக ஒரு நொந்தாவிளக்குச் சந்திராதித்தவல் எரிப்போமானேம் தேவகன்மிகளோம். இவை பந்மாகேஸ்வர

*இடம் :- தெற்குச்சுவர் நடு இடத்தில் உள்ளது.*

*செய்தி :- புலியூர்க் கோட்டத்து மயிலாப்பூர் வியாபாரி விளத்தூர் கிழவன் அரையன் அரிவலன் 25 கழஞ்சு பொன் கொடுத்து நிலம் 3 மா முக்காணி வாங்கி இறையிலி தேவதானமாக ஒரு நுந்தாவிளக்கு மூலஸ்தானத்து மஹாதேவர்க்கு எரிக்கக் கொடுத்துள்ளான். நிலவருமானம் 7 கலம் தூணிப்பதக்கு (6 மரக்கால்).*

## 19. திருவிளக்குநர்மம்

(No. 712 A. R. No 148 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ கோவிராசகேசரிபந்மற்கு யாண்டு கசு-வது திரைமூர்நாட்டுத் திருவிடைமருதில் ஸ்ரீமூலஸ்தானத்துப்பெருமானடிகளுக்குத் திருநறையூர்நாட்டுப் பாரதாயன் சம்வத்ஸனை வெண்ணையூருடையான் அரையன் பாரதனாகிய வியாத்தகமலப் பல்லவரையர்

திருவிடைமருதுடையார்க்கு ... ... ... விளக்கினுக்கு வைத்த சாவாமூவாப்பேராடு ௯௦. இவ்வாடுகொண்ட மன்றாடிமிருதி காருயில் சந்திராதித்தவல் நிசதம் ... ... வ எண்ணை உழக்கு. இவை பந்மாகேஸ்வரரக்ஷை.

*இடம் :- முன் இடமே.*

*செய்தி :- பெருமானுக்குத் திருவிளக்கு எரிக்க 90 ஆடுகள் கொடுக்கப்பட்டுள்ளது.*

## 20. மாஹேஸ்வரர்தர்மம்

(No. 713 A. R. 149 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ மதுரைகொண்ட கோப்பரகேசரிபந்மற்கு யாண்டு ௫௫-ஆவது இருமுடிசோழப் பல்லவரையர் திருவிடைமருதுடையார்க்கு அக்காரடலையும் திருமெய்ப்பூச்சுச் சந்தனத்துக்கும் சிதாரிக்கும் மகேஸ்வரருக்கும் பிராஹ்மணர்க்கும் திருநொந்தா விளக்கினுக்கும்; அக்காரடலைக்கு மூவேலியும், சந்தனமும் சிதாரிக்கும் வேலியும், நொந்தாவிளக்கு எட்டினுக்கு இருவேலியும், மாகேஸ்வரர் உட்படகுணன் மூவேலி, பிராஹ்மணர் இருபதின்மருக்கு ஐவேலியும் ஆக நிலம் ௧௪ வேலி. இப்பதினாலு வேலியும் இருமுடி சோழப் பல்லவரையர் திரைமூர் ஸபையாரிடையும் திருவிடைமருதில் நகரத்தாரிடையும் விலைக்குக்கொண்ட குறைக்குக் கீழ்பாற்கெல்லை வண்ணக்குடியார் பிணம் போகும் பெருவழிக்கு மேற்கும் தென்பாற்கெல்லை பெருவழிக்கு வடக்கும் மேற்குண்ணும் வண்ணக்குடியார் வாய்க்காலினுக்கு வடக்கும் மேல்பாற்

கெல்லை பழங்காவிரிக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை பழங்காவிரிக்குத் தெற்கும் ஸ்ரீ குடந்தையார் நிலத்துக்குத் தெற்கும் மாறு பரணபுரத்தார் எல்லைக்குத் தெற்கும் இவ்விசைந்த பெருநான்கெல்லையிலும் அகப்பட்ட நிலமெல்லாம் திருவிடைமருதுடையார்க்கே உரித்தாகச்செய்து கல்லில் வெட்டித்து. இது பந்மாகேஸ்வரரக்ஷை.

*இடம் :- மண்டபத்தின் கிழக்குச்சுவர்.*

*செய்தி :- நில தர்மசாஸநம் (14 வேலி நிலம்).*

*தர்ம விபரம் - அக்கார் அடலை 3 வேலி, சந்தனம் சிதாரி 1 வேலி, நொந்தவிளக்கு எட்டுக்கு 2 வேலி, மாஹேஸ்வரருக்கு 3 வேலி, பிராம்மணர் இருபது பேர் உணவுண்ண 5 வேலி ஆக 14 வேலி.*

*இப்பதினான்கு வேலியும் திரைமூர் சபையாரிடமும், திருவிடைமருதூர் நகரத்தாரிடையும் விலைக்குக்கொண்டது.*

*நான்கெல்லை :- கீழ்ப்பக்கத்து எல்லை வண்ணக்குடியார் பிணம்போகும் பெருவழிக்கு மேற்கு, தென்பாற்கெல்லை பெருவழிக்கு வடக்கு, வண்ணக்குடியார் வாய்க்காலுக்கு வடக்கு, மேல்பாற்கெல்லை பழங்காவிரிக்குக் கிழக்கு, வடபாற்கெல்லை பழங்காவிரிக்குத் தெற்கு, குடந்தையார் நிலத்துக்குத் தெற்கு, மாறுபரணபுரத்தார் எல்லைக்குத் தெற்கு இவற்றுக்குட்பட்ட நிலம் முழுதும்.*

*குறிப்பு :- பழங்காவிரி, காவேரி மூலைத்தெரு, இரயில் நிலயத்துக்கு அருகாமையில் உள்ளது. படித்துறை விநாயகர், கோயிலின் முன் உள்ளவர். மாறுபரணபுரம் இன்று வாணபுரம் என்று வழங்குகிறது.*

*பொருள் விளக்கம் :- அக்காரடலே - சர்க்கரைப் பொங்கல். சிதாரி - அகிற்கட்டை.*

## 21. மாஹேஸ்வரர்தர்மம்

(No. 714 A. R. No. 150 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிபந்மற்கு யாண்டு கக-ஆவது வெண்ணாட்டு வரம்புசலுடையான் சந்திராதிச்சன் சத்துருகண்டன் திருவிடைமருதுடையார் சாலே உண்ணும் பிராஹ்மணர்க்கு இவனிட்ட நாலம் கஅ ஞல் நிறை உகூ௰ இருபலவரையும் சட்டுவம் க நிறை ரு பலமுமாக நிறை உகூ௰ எழுபல வரை. இவை பந்மாகேஸ்வரரக்ஷை.

*இடம் :- முன் இடமே.*

*செய்தி :- பிராமணர் உணவுண்ணச் செய்துள்ள ஏற்பாடு.*

## 22. திருவிளக்குதர்மம்

(No. 715 A. R. No. 151 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிபந்மற்கு யாண்டு ந-ஆவது தென்கரைத் திரைமூர்நாட்டு திருவிடைமருதில் ஸ்ரீ மூலஸ்தானத்து மஹாதேவர்க்குக் காரைக்காட்டு புதுக்குடி ஊரார் மிறைகணபதியான கண்டராதித்த முத்தரையன் ஒருநொந்தாவிளக்கினுக்கு வைத்த ஆடு கூசு. இவ்வாடு தொண்ணூற்ரறு ... ... கடவ நெய் நிசதம் உழக்கிஞல் விளக்கொன்று .........

*இடம் :- முன் இடமே.*

*செய்தி :- நொந்தாவிளக்குக்கு வைத்த ஆடு 96.*

## 23. விளங்குடிப்பாட்ட நிலசாசனம்

(No. 716 A. R. No. 152 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ கோவிராசகேசரிபன்மற்கு யாண்டு ருஅ-ஆவது திரைமூர்ச் சபையோமும் திருவிடைமருதில் நகரத்தாரும் திருக்கோயிலுடையார்களும் ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற இருமுடி சோழப் பல்லவரையரும் இவ்வனைவோமும் உடையார்கோயிலில் முன்பலிபீடத்தின் கீழ்பாலிருந்து திருவிடைமருதுடையார்க்குக் கவரிப் பிணாக்கள்வேண்டும் என்று இவர்களுக்கு மெய்யால் திவஸம் முந்நாழி நெல்லுப்பெறுவதாக தேவதானம் விளங்குடிப்பாட்டம் அறுபது நீக்கி நின்ற நிலத்திலே வந்த நெல்லுப்பெறுவதாக கவரிப்பிணாக்கள்பேர் கல்மேல் வெட்டுக என்று இவ்வனைவோரும் இருந்து எவர் பேர்வெட்டியபடி உறையூர் வன்னிநங்கலி வெள்ளி குணவி மழுபாடி மருதியும் தேவிசிங்கி காமகோடி நங்கை என்பாள் கரியமாதேவி ஆச்சபிடாரி திருவி சாந்தியும் பெற்றுள். பெரிய இலவம் நகை... ... ... ... ஆச்சபிடாரி காமடி க.........

*இடம் :- மண்டபம் வடக்குச்சுவரில் உள்ளது.*

*செய்தி :- விளங்குடிப்பாட்டத்தில் பெற்ற நெல்லின் விபரம் தெரிகின்றது.*

## 24. திருவிளக்குநர்மம்

(No. 717 A. R. No. 153 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிபன்மற்கு யாண்டு ...... வது தென்கரைத் திரைமூர் நாட்டுத் தேவதானம்

திருவிடைமருதில் ஸ்ரீ மூலத்தானத்து மஹேஸ்வரர்க்கு இந்நாட்டுக் குமரமாத்தாண்டபுரத்து வியாபாரி உதையடி வெங்கடவன் வைத்த நொந்தாவிளக்கு ஒன்று. இவ்வொன்றினுக்கும் இ ... ... டையான் சந்திவாமன ஞன திருவெள்ளிகுடி... ... ...டை நாட்டுத் தங்குடி இவனிடை விலைகொண்ட நிலம் அறுமா. இதில் கால் செக்கும் கீழ்பாக்கு எல்லைத் தங்குடிஊர்க்குளத்துக்குப் பாய்கண்ட வாய்க்காலுக்கு மேற்கும் தென்பாற் கெல்லை ஐயன்கோயில் குளத்துக்கு வடக்கும் மேல் பாற்கெல்லை ஊர்க்கேபுக்கவழி வரம்புக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை பில்லாற்றுக்குத் தெற்கும் இசைந்த பெருநான்கெல்லையிலும் அகப்பட்ட நிலம் கல்லும் ஐயன்கோயிலின் மேலை நாற்றுக் காலொடு மாவுக்கும் கீழ்பாற்கெல்லை ஐயன்கோயிலுக்கு மேற்கும் தென்பாற் கெல்லை கோழிகுத்தி பறைச்சேரிக்கு வடக்கும் மேல் பாற்கெல்லை ஊர்க்குக் கிழக்கும் வடபாற்கெல்லை செ ... ... ...காலுக்குத்தெற்கும் இவ் இசைந்த பெருநான் கெல்லையிலும் அகப்பட்டநிலம் ஒருமாவும் ஆக நிலம் இருகிடக்கையாலும் ஆறு மாவும் மிகுதி குறைவுள் ளொடுங்க இந்நிலம் க ... ... ... தன்இறை நீக்கி நிசதி ஒரு நொந்தாவிளக்கு எரிப்போமானோம் தேவர்க ளோம். இவை* பன்மாகேஸ்வரரக்ஷை. இந்நிலத்துக்கு விலையாகக் கொடுத்த பொன் முப்பத்து ஐங்கழஞ்சு.

*இடம் :-* முன் இடமே.

*செய்தி :-* *குமரமாத்தாண்டபுரத்து வியாபாரி உதையடி வெங்கடவன் மூலஸ்தானத்தில் நொந்தா விளக்கு எரிக்க திருவெள்ளிகுடி என்ற கிராமத்தில் ஆறு மா நிலம் வாங்கி அளித்துள்ளான். நிலவிலை முப்பத்தைந்து கழஞ்சு பொன்.*

## 25. நாடகசாலைக்கு நிவந்தம்

( No. 718 A. R. No. 154 of 1895 )

ஸ்வஸ்திஸ்ரீ பாண்டியன் தலைகொண்ட கோப்பர கேசரிபந்மற்கு யாண்டு ௪-ஆவது திருவிடைமருதில் ஸ்ரீ மூலஸ்தானத்தில் பெருமானடிகளுக்கு ஆரியக் கூத்தாட ஸ்ரீ காரியம் ஆராய்கின்ற அதிகாரிகள் சிற்றிங்கண் உடையான் கோயில் மயிலை ஆன பராந்தக மூவேந்தவேளாரும் திரைமூர்நாடுடையாரும் திரு விடைமருதில் நகரத்தாரும் தேவகந்மிகளும் நாடக சாலையிலேயிருந்து கித்திமறைக்காடன் ஆன திருவெள் ளறை சாக்கைக்கு நிவந்தஞ்செய்து குடுக்க என்று ஏவலால் இத்தேவர் தேவதானம் விளங்குடி நிலத்தில் பறைச்சேரிபத்து உள்பட நிலம் வேலியும் இவ்வாண் டின் எதிராமாண்டு முதல் இந்நிலங்கொண்டு தைப் பூசத் திருநாளிலே ஒரு கூத்தாடுவதாகவும், திருத்தம் ஆடின பிற்றைநாள் துடங்கி மூன்று கூத்தாடுவ தாகவும், வைகாசித் திருவாதிரையின் பிற்றைநாள் தொடங்கி மூன்று கூத்தாடுவதாகவும் ஆக இந்தக் கூத்து ஏழு அங்கமும் ஆடுவதாகவும் பண்டாரத்தே பதிறுற்கல நெல்லு கொற்றுப்பெறுவதாகவும் இந் நெல்லும் விலை அடைப்படி நெல்லும் கொற்றும் இரட்டி அவ்வவ்வாட்டையாடுகவும். இப்பரிசு கித்தி மறைக்காடனல் திருவெள்ளறைச் சாக்கைக்குச் சந்

*இடம் :- முன் இடமே.*

*செய்தி :- கித்திமறைக்காடன் ஆன திருவெள் ளறை சாக்கைக்கு நாடகம் ஆட விளங்குடியில் நிலம்*

ஒருவேலி தானம் செய்துள்ளான். தைப்பூசத் திருநாளில் நான்கு நாடகமும், வைகாசிப் பெருவிழாவில் மூன்று நாடகமும் ஆடவேண்டும்.

*பொருள் விளக்கம் :-* எதிராமாண்டு என்றது இவனது ஆட்சியாண்டு ஐந்தாவதைக் குறிக்கிறது; இது நான்காவதாண்டினது ஆகலின். திருத்தம் - தீர்த்தவாரி; இது பத்தாம்நாள் நடைபெறும் விழா.

*பொதுக்குறிப்பு :-* இக்கல்வெட்டால் இக்கோயிலில் நாடகசாலை என்ற இடம் தனியே இருந்ததென்பதும் தெரியப்படுகிறது.

## 26. திருவிளங்குநர்மம்

(No. 719 A. R. No. 155 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ மதுரைகொண்ட கோப்பரகேசரி பந்மற்கு யாண்டு உச-ஆவது செம்பியன் தமிழவேளாளுகிய ப ... ... னுப்பன் திருவிடைமருதில் ஸ்ரீ மூலஸ்தானத்து மஹாதேவர்க்கு நொந்தாவிளக்கினுக்கு வைத்த ஆடு தொண்ணூறு. இவைகொண்டு மன்றாடிதாழி கணவதிவழி அடுநெய் நிசதம் உழக்கு அட்டக்கடவ. நெய்யால் நொந்தாவிளக்கு ஒன்று.

*இடம் :-* முன் இடமே.

*செய்தி :-* திருவிளக்கிற்கு விட்ட ஆடு தொண்ணூறு. ஒரு விளக்குக்கு உழக்குநெய்.

*பொருள் விளக்கம் :-* நிசதம் - நாடோறும். அட்டக்கடவ - கொடுப்பதாக.

## 27. திருவிளக்குநர்மம்

(No. 720 A. R. No. 156 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜகேஸரிவன்மற்கு யாண்டு ௰-ஆவது ஆனைமேற்றுஞ்சின உடையார் தங்களாச்சியார் உடையபிராட்டியார் பரிவாரத்துப் பெண்டாட்டியான பொதுவன் சிற்றடி திருவிடைமருதில் ஆள்வார்க்குத் திருவிளக்கினுக்கு வைத்த ஈழக்காசு உ௰. இருபதினால் பொன் பதின்கழஞ்சும் திருவிடைமருதுடையார் அமுதுசெய்யுந் தண்ணீரமுதுவட்டில்பொன் இருபத்துநாற்கழஞ்சு உச. இப்பொன் இருபத்துநாற்கழஞ்சுங்கொண்டு கூ-ஆவது நிதிய நிராகுல பிருஹ்மாதிராயர் ஆராய்ச்சியில் தநிசுகொண்டு இப்பொன் இருபத்துநாற்கழஞ்சும் பொதுவன் சிற்றடி வைத்த காசு இருபதினால் பொன் பதின்கழஞ்சொடும் திருவிடைமருதில் நகரத்தார் தேவர்க்குத் தநிசு ஒழிய இப்பொன் இருபத்துநாற்கழஞ்சும் நாங்களே இவ்விளக்கினுக்குக் கொண்டு அப்பொன் முப்பத்துநாற்கழஞ்சு ௩ச. முப்பத்துநாற்கழஞ்சுங்கொண்டு திருவிடைமருதில் ஆள்வார்க்கு ஒருநொந்தாவிளக்கு எரிப்போமானோம் திருவிடைமருதில் பெருநகரத்தோம். இது சந்திராதித்தவல். பன்மாகேஸ்வரரக்ஷை.

*இடம் ;- முன் இடமே.*

*செய்தி :- திருவிளக்கிற்குப் பொதுவன் சிற்றடி வைத்த ஈழக்காசு இருபது, பத்து கழஞ்சு பொன். பொன்னாலாகிய தண்ணீரமுது வட்டில் இருபத்து நாலு கழஞ்சு; ஆக முப்பத்துநாலு. இதுகொண்டு விளக்கு எரித்தார்கள்.*

## 28. உடுக்கைவாசிக்க நிவந்தம்

(No. 721 A. R No. 157 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ மதுரைகொண்ட கோப்பரகேசரிபந் மற்கு யாண்டு உஎ-ஆவது திருவிடைமருதுடையா ருக்கு ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற குறும்பில் வாஸு தேவனர் ஆராய்ச்சியில் திரைமூர் ஸபையாரும்... ... த ... ... ரல் நகரத்தாரும் திருக்கோயிலுடையார்களும் பதிபாத மூலத்தாரும் நாடகசாலையிலிருந்து திருவிடை மருதூருடையார்க்குத் திருஓலக்கத்து மூன்றுஸந்தியும் உடுக்கை வாசிப்பான் ஒருவனுக்கு விளங்குடிதேவர் நிலத்தில் நிவந்தமாகச்செய்த நிலம் முக்கால்.

*இடம்:- முன் இடமே.*

*செய்தி :- திருவிடைமருதூருடையார் திரு ஓலக் கத்து மூன்று சந்தியும் உடுக்கை வாசிக்க விட்ட நிலம் முக்கால் வேலி.*

## 29. நிலவிலையாவணம்

(No. 722 A. R. No. 158 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ தண்டெ ... ... ... மலையாளர் தலை யறுத்துத் ... ... ளம்பாடியும் மெத்தார் 'கங்ககொண்ட நித்தவினேதன் நெரி ... ... ... ன் கொத்து மலத்தார் ஸ்ரீ மும்முடி ... ... கேஸரிப்பந்மற்கு யாண்டு கச-வது திருவிடைமருதுடையார் ஸ்ரீகாரியம் ஆராய்கின்ற

திரைமூர் ஸபையாரும் திருவிடைமருதில் நகரத்தாரும் இருந்து தேவர்கணக்கு எழுதின ஆதனூர் உடையான் பிரமகுட்டன் உதயமார்த்தாண்டனை தனிசேவக திணையான் திருவிடைமருதில் மறைாதேவற்குத் திருக்குடமூக்கில் விலைநின்ற சிறுகழனி என்று பெயர் கூறப்படும் நிலம் புஞ்சைக்கும் நீர்நிலத்துக்கும் கீழ்பாற்கெல்லை தெற்கு நின்றும் ஆங்கே வடக்கு நோக்கிப்போன பெருவழிக்கும் திருக்கீழ்க் கோட்டத்துத் தேவர் நிலத்துக்கு மேற்கும் இந்நிலத்துக்கே தென்பாற்கெல்லை கழுதுவன் காறி ஐயாறனும் காரி நாராயணன் நிலத்துக்கு வடக்கும் இந்நிலத்துக்கே கீழ்பாற்கெல்லை காரி நாராயணனும் காரி ஐயாறன் நிலத்துக்கு மேற்கும் மேற்படியார்கள் நிலத்துக்கும் வண்ணக்குடி வாய்க்காலுக்குத் தெற்கும் இன்னும் இவர்கள் நிலத்துக்கே மேற்கும் தென்பாற்கெல்லை காரி நாராயணனும் காரி ஐயாறன் நிலத்துக்கே வடக்கும் மேற்படியார்கள் நிலத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லை திருக்கீழ்க்கோட்டத்துத் தேவர் நிலத்துக்குத் திருவேள்விக்குடி தி ... ... ... ... வன் தொண்டன் நிலத்துக்கும் தலைசயனதேவர் நிலத்துக்குக் கிழக்கும் வண்ணக்குடி வாய்க்காலுக்கு வடக்கும் இத்தேவர் புஞ்சைக்கு மேல்பாற்கெல்லை திருக்கீழ்க் கோ ... ... ல்லைக்கு மேற்கும் வடபாற்கெல்லை காவிரி நீரோடுகாலுக்குத் தெற்கும் இவ்விசைத்த பெருநான்கெல்லைக்கும் நடுவுபட்ட நிலம் சிறுகழனி என்று பெயர் கூறப்படும் நிலம் இத்தனையும் உணிலம் மொழிவின்றி விற்றுக்கொடுத்தேன் ஆதனூர் உடையான் பிரமகுட்டன் உதயமார்த்தாண்டனேன்.

*இடம்:- மண்டபத்தின் அடிச்சுற்று.*

*செய்தி :- ஆதனூர் உடையான் பிரமகுட்டன் உதயமார்த்தாண்டன் என்பான் கும்பகோணத்தில் சிறுகழனி என்னும் பெயருடைய புஞ்செய் நிலமும் இன்னும் சில நிலங்களும் எல்லே கண்டு கொடுத்துள்ளான்.*

## 30. இராஜராஜசோழன் சாசனம்

(No. 723 A. R. No. 159 of 1895)

ஸ்வஸ்திஸ்ரீ
திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலே கலமறுத் தருளி
வேங்கை நாடும் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்
குடமலே நாடும் கொல்லமும் கலிங்கமும்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டுதன்
னெழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டும்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் ஸ்ரீ கோராஜகேஸரி பன்மற்கு,

யாண்டு கசு-ஆவது தென்கரைத்திரைமூர்நாட்டுப் பிரஹ்மதேயம் மஹாமங்கலத்துச்சபையோம் விற்றுக் குடுத்த நிலவிலேயாவணம். தாலபட்டோலே எழுதின சேந்தமங்கலமுடையானுக்காய்க் கீழ்க்கணக்கெழுதின முழையூருடையான் அட்டாநங் நமச்சிவாயத்தைக் கொள்ளப்பெருமானடிகள் அருளிச்செய்த காசுக்குத்

விலைகொண்டு காசு வைப்பனென்னநீங்கின நிலம் ... ம் ஸபையோமிதாய் -கிடந்த நிலம் ச-வும் ஆக நிலன் ... ... ... நீக்கி நிலன் ... ... ... இந்நிலன் முக்காலே நாலுமா வரையும் விலைக்குக் கொள்வாரிலையோ என்று முற்கூற இம்மொழி கேட்டுப் பொன்மாளிகைத்துஞ்சின தேவதேவியார் செரமானுர் மகளார் பிராந்தகன் தேவியானுர் விலைக்குக் கொள்வனென்று பிற்கூற முற்கூறிய் மஹேந்திரமங்கலத்துச் சபையோம் இப்பிராந்தகன் தேவியாயினுர்க்கு விற்றுக் குடுத்த நிலன் இவ்வூர் தென்வினுடைய நிலன் பலவாய் பழம்படி வாய்கூறுபுள்ளியால் வந்த நிலன் இந்நிலன் முக்காலே நான்மாவரையிலும் பெருமான் வாயின் வடகரை நிலன் ... ... ... மும் இதன் மேலைநிலன் ருமச யுமாக நிலன் ருச மாவுக்கும் கீழ்பாற்கெல்லை கருவாய்க்காலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை பெருமான் வாய்க்கு வடக்கும் மேல்பாற்கெல்லை திரைமூர் எல்லை வரம்புக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை இவ்வூர் திருப்பாற்கடல் தேவர் நிலத்துக்கும் திருவிடைமருதில் சண்டேஸ்வரப்பெருமான் நிலத்துக்கும் திரைமூர் எல்லைவரம்புக்குத் தெற்கும் இன்னும் பெருமாங்வாயில் தென்கரை நிலன் ... ... க்கு கீழ்பாற்கெல்லை கருவாய்க்காலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை தாமன்வாய்க்கு வடக்கும் மேல்பாற்கெல்லை மாடலன் மாதவன் அப்பிரமயன் நிலத்துக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை பெருமான் வாய்க்குத் தெற்கும் இன்னும் தாமன் வாயினின்றும் தெற்கு நோக்கிப்போன உட்சிறு வாய்க்காலின் கீழ்கரை நிலவரம்புக்கும் கீழ்....

*இடம் :- மண்டபத்தின் வேறுபக்கம்*

*அரசன் :-* முதலாம் இராஜராஜசோழதேவன். மஹேந்திரமங்கலச் சபையார் நிலவிலையாவணம்.

*செய்தி :-* சேந்தமங்கலமுடையான் தவறுசெய்ய, அத்தவற்றைக் கோயில் கணக்கு முழையூருடையான் எடுத்துக்காட்ட, தஞ்சை இராஜராஜமாராயர் வெயிலிலும் தண்ணீரிலும் பலகால் நிறுத்தித் தண்டிக்க, தண்டனைக்காற்றாது அறுபத்திரண்டு காசு கொடுத்து நிலம் ஒருவேலி இரண்டு மா வாங்கிக் கொடுத்தான்.